# பாரதி

## பன்முகக் களஞ்சியம்



தொகுப்பும் பதிப்பும்:

**ய.மணிகண்டன்**

# பாரதி

## பன்முகக் களஞ்சியம்

தொகுப்பும் பதிப்பும்:

**ய. மணிகண்டன்**

பேராசிரியர் - தலைவர்
தமிழ்மொழித் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்



**விழிகள்**
பதிப்பகம்

8/எம் 139, 7ஆம் குறுக்குத் தெரு
திருவள்ளுவர் நகர்
திருவான்மியூர் விரிவு, சென்னை 41
9444244017/9444 265152

**நூல் விவரக் குறிப்புகள்**

நூற் பெயர் :
பாரதி பன்முகக் களஞ்சியம்

தொகுப்பும் பதிப்பும் :
ய. மணிகண்டன்

முதற் பதிப்பு : 14.10.2017

பக்கங்கள் : 64

வடிவமைப்பும்
மெய்ப்புத் திருத்தமும் :
விழிகள் தி. நடராசன்
9444 265152

கணினி வடிவமைப்பு :
வெல்கின் கணினி
சென்னை-600 041
9444 535771

அச்சிடல் :
பிரிண்டெக் இண்டியா
சென்னை - 600 005

விலை : ரூ.60

ISBN : 978-81-929626-6-5

# முன்னுரை

தமிழ்க் கவிதை வரலாற்றில் மகத்தான பேராளுமையாக மகாகவி பாரதி காட்சி தருகின்றார். பாடுபொருளாலும் உணர்த்துமுறையாலும் வடிவ அமைப்பாலும் 'சோதிமிக்க நவகவிதை'களைச் சுடரச்செய்த பாரதியின் பரிமாணங்கள் பன்முகப்பட்டவை. குறுகிய வாழ்க்கைப் பயணத்துள் அவர் தமிழ்க் கவிதைத் துறையில் சாதித்தவை ஏராளம். சோதனை முயற்சிகளும் சாதனை முயற்சிகளும் 'பெரிதினும் பெரிது'. இவற்றைக் கருத்தில் கொண்டே உலகளாவிய தமிழறிஞர் கமில் சுவலபில் தமிழ்க் கவிதைத் துறையில் உருவத்திலும் உள்ளடக்கத்திலுமாக இரட்டைப் புரட்சிகளை நிகழ்த்தியவர் எனப் பாரதியை மதிப்பிட்டார்.

கவிதைத் துறையில் மட்டுமல்லாமல் கதை, கட்டுரை, மொழிபெயர்ப்பு, புதினம், நாடகம் முதலிய களங்களிலும் முன்னோடி நிலையிலும் தனித்தன்மை கொண்ட வகையிலும் படைப்புப் பங்களிப்பை வழங்கியிருக்கின்றார். இலக்கியம் என்னும் நிலையில் அல்லாமல் தனிப்பட்ட முறையில் அவர் எழுதிய கடிதங்கள்கூட இலக்கியத் தகுதியோடு திகழ்கின்றன. தமிழில் மட்டுமல்லாமல் ஆங்கிலத்திலும் கவிதை, கட்டுரை, கதை, மொழிபெயர்ப்பு முதலியவற்றைக் குறிப்பிடத்தக்க நிலையில், தனித்தன்மையோடு பாரதி படைத்திருக்கின்றார்.

பாரதியின் பல்வகை இலக்கியப் படைப்புகளையும், ஆக்கங்களையும் ஒருசேரக் காணும் வண்ணம் வகைமாதிரிக் களஞ்சியங்களை உருவாக்குதல் பாரதியியலை வளப்படுத்துவதாகவும் பாரதியின் பல்வகைப் பரிமாணங்களையும் இலக்கிய அன்பர்கள் கண்டு மகிழத் துணைபுரிவதாகவும் அமையும். இதனை மனங்கொண்டு இந்நூல் பாரதியின் பல்வகைப் படைப்புகளையும் ஒருசேரக் கண்ணுற உதவும் குறுங்களஞ்சியமாக மலர்கின்றது. எதிர்காலத்தில் மேலும் சிலவகைகளையும் பல படைப்புகளையும் உள்ளடக்கியதாக இம்முயற்சி வளம்பெற வேண்டும்; வளம்பெறும்.

இந்நூல் முயற்சியில் என் அன்பிற்கினிய ஆய்வு மாணவச் செல்வங்கள் திருமதி. ம.அ. மணிமேகலை, கா. லாரன்ஸ், செல்வி ஏ. கவிதா, செல்வி கோ. லோகேஸ்வரி, செல்வன் சு. அசோக்குமார் ஆகியோர் துணைபுரிந்துள்ளனர். அவர்களுக்கு என் வாழ்த்துகளை உரித்தாக்கி மகிழ்கின்றேன்.

இப்படி ஒரு நூலை உருவாக்க வேண்டும் என்றதும் உடனடியாக அனைத்து ஏற்பாடுகளையும் செய்து நூலை நேர்த்தியுற வெளிக்கொணர்ந்து தமிழுலகிற்கு என் அன்பிற்கினிய அண்ணன் விழிகள் பதிப்பகம் திருமிகு தி. நடராசன் அவர்கள் வழங்கியுள்ளார்.

பாரதிய உலகம் இந்நூல் கண்டு மகிழும் என நம்புகிறேன்.

14.10.2017

**ய. மணிகண்டன்**

## பொருளடக்கம்

கவிதை

# தமிழ்

யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவ தெங்குங் காணோம்
பாமரராய், விலங்குகளாய், உலகனைத்தும்
இகழ்ச்சிசொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழரெனக் கொண்டிங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ? சொல்லீர்!
தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும்வகை செய்தல் வேண்டும்.

யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்,
வள்ளுவர்போல், இளங்கோ வைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததிலை;
உண்மை;வெறும் புகழ்ச்சி யில்லை;
ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய்
வாழ்கின்றோம்; ஒருசொற் கேளீர்!
சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
தமிழ்முழக்கம் செழிக்கச் செய்வீர்!

பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்;
இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்;
மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்வதிலோர் மகிமை யில்லை;
திறமான புலமையெனில் வெளிநாட்டோர்
அதைவணக்கஞ் செய்தல் வேண்டும்

உள்ளத்தி லுண்மையொளி யுண்டாயின்
வாக்கினிலே ஒளியுண் டாகும்
வெள்ளத்தின் பெருக்கைப்போற் கலைப்பெருக்கும்
கவிப்பெருக்கும் மேவு மாயின்
பள்ளத்தில் வீழ்ந்திருக்குங் குருடரெலாம்
விழிபெற்றுப் பதவி கொள்வார்;
தெள்ளுற்ற தமிழமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்.

ய. மணிகண்டன்

# எங்கள் மதம்

(உயிர்பெற்ற தமிழர் பாட்டு)

இனியொரு தொல்லையும் இல்லை - பிரி
வில்லை, குறையும் கவலையும் இல்லை - இனி

## ஜாதி

மனிதரில் ஆயிரம் சாதி - என்ற
வஞ்சக வார்த்தையை ஒப்புவ தில்லை
கனிதரு மாமரம் ஒன்று - அதில்
காய்களும் பிஞ்சுக் கனிகளும் உண்டு.

பூவில் உதிர்வதும் உண்டு - பிஞ்சைப்
பூச்சி அரித்துக் கெடுவதும் உண்டு
நாவிற் கினியதைத் தின்பார் - அதில்
நாற்பதி னாயிரம் சாதிகள் சொல்லார்

ஒன்றுண்டு மானிடச் சாதி - பயின்(று)
உண்மைகள் கண்டவர் இன்பங்கள் சேர்வார்
இன்று படுத்தது நாளை - உயர்ந்
தேற்றம் அடையும் உயர்ந்த திழியும்

நந்தனைப் போல்ஒரு பார்ப்பான் - இந்த
நாட்டினில் இல்லை குணம்நல்ல தாயின்
எந்தக் குலத்தின ரேனும் - உணர்
வின்பம் அடைதல் எளிதெனக் கண்டோம்

## இன்பத்திற்கு வழி

ஐந்து புலனை அடக்கி - அர(சு)
ஆண்டு மதியைப் பழகித் தெளிந்து
நொந்து சலிக்கும் மனதை - மதி
நோக்கத்திற் செல்ல விடும்வகை கண்டோம்

## புராணங்கள்

உண்மையின் பேர்தெய்வம் என்போம் - அன்றி
ஓதிடும் தெய்வங்கள் பொய்யெனக் கண்டோம்
உண்மைகள் வேதங்கள் என்போம் - பிறி(து)
உள்ள மறைகள் கதையெனக் கண்டோம்

கடலினைத் தாவும் குரங்கும் - வெங்
கனலிற் பிறந்ததோர் செவ்விதழ்ப் பெண்ணும்
வடமலை தாழ்ந்தத னாலே - தெற்கில்
வந்து சமன்செயும் குட்டை முனியும்

நதியினுள் ளேமுழு கிப்போய் - அந்த
நாகர் உலகில்லோர் பாம்பின் மகளை
விதியுற வேமணம் செய்த - திறல்
வீமனும் கற்பனை என்பது கண்டோம்

ஒன்றுமற் றொன்றைப் பழிக்கும் - ஒன்றில்
உண்மையென் றோதிமற் றொன்றுபொய் யென்னும்
நன்றுபு ராணங்கள் செய்தார் - அதில்
நல்ல கவிதை பலபல தந்தார்

கவிதை மிகநல்ல தேனும் - அக்
கதைகள்பொய் யென்று தெளிவுறக் கண்டோம்
புவிதனில் வாழ்நெறி காட்டி - நன்மை
போதிக்கும் கட்டுக் கதைகள் அவைதாம்

## ஸ்மிருதிகள்

பின்னும் (ஸ்)மிருதிகள் செய்தார் - அவை
பேணும் மனிதர் உலகினில் இல்லை
மன்னும் இயல்பின வல்ல - இவை
மாறிப் பயிலும் இயல்பின ஆகும்

காலத்திற் கேற்ற வகைகள் - அவ்வக்
காலத்திற் கேற்ற ஒழுக்கமும் நூலும்
ஞாலம் முழுமைக்கும் ஒன்றாய் - எந்த
நாளும் நிலைத்திடும் நூலொன்றும் இல்லை

சூத்திர னுக்கொரு நீதி - தண்டச்
சோறுண்ணும் பார்ப்புக்கு வேறொரு நீதி
சாத்திரம் சொல்லிடு மாயின் - அது
சாத்திரம் அன்று சதியென்று கண்டோம்

## மேற்குலத்தார் எவர்?

வையகம் காப்பவ ரேனும் - சிறு
வாழைப் பழக்கடை வைப்பவ ரேனும்
பொய்யக லத்தொழில் செய்தே - பிறர்
போற்றிட வாழ்பவர் எங்கணும் மேலோர்

## தவமும் யோகமும்

உற்றவர் நட்டவர் ஊரார் - இவர்க்(கு)
உண்மைகள் கூறி இனியன செய்தல்
நற்றவம் ஆவது கண்டோம் - இதில்
நல்லபெ ருந்தவம் யாதொன்றும் இல்லை

பக்கத் திருப்பவர் துன்பம் - தனைப்
பார்க்கப் பொறாதவன் புண்ணிய மூர்த்தி
ஒக்கத் திருந்தி உலகோர் - நலம்
உற்றிடும் வண்ணம் உழைப்பவன் யோகி

## யோகம் - ஞானம்

ஊருக் குழைத்திடல் யோகம் - நலம்
ஓங்கிடு மாறு வருந்துதல் யாகம்
போருக்கு நின்றிடும் போதும் - உளம்
பொங்கல்இல் லாத அமைதிமெய்ஞ் ஞானம்

## பரம்பொருள்

எல்லையில் லாத உலகில் - இருந்
தெல்லையில் காலம் இயங்கிடும் தோற்றம்
எல்லையில் லாதன வாகும் - இவை
யாவையும் ஆயிவற் றுள்ளுயி ராகி

எல்லையில் லாப்பொருள் ஒன்று - தான்
இயல்பறி வாகி இருப்பதுண் டென்றே
சொல்லுவர் உண்மை தெளிந்தார் - இதைத்
தூவெளி என்று தொழுவர் பெரியோர்

நீயும் அதனுடைத் தோற்றம் - இந்த
நீல நிறங்கொண்ட வானமும் ஆங்கே
ஓயுதல் இன்றிச் சுழலும் - ஒளி
ஓங்குபல் கோடிக் கதிர்களும் அஃதே

சக்திகள் யாவும் அதுவே - பல
சலனம் இறத்தல் பிறத்தலும் அஃதே
நித்தியம் ஆமிவ் வுலகில் - கடல்
நீரில் சிறுதுளி போலும்இப் பூமி

இன்பமும் ஓர்கணத் தோற்றம் - இங்கு
இளமையும் செல்வமும் ஓர்கணத் தோற்றம்
துன்பமும் ஓர்கணத் தோற்றம் - இங்கு
தோல்வி முதுமை ஒருகணத் தோற்றம்

## முக்தி

தோன்றி அழிவது வாழ்க்கை - இதில்
துன்பத்தோ டின்பம் வெறுமையென் றோதும்
மூன்றில் எதுவரு மேனும் - களி
மூழ்கி நடத்தல் பரசிவ முக்தி.

வசன கவிதை

# காட்சி

## முதற்கிளை: இன்பம்

இவ்வுலகம் இனியது. இதிலுள்ள வான் இனிமையுடைத்து.
காற்றும் இனிது.
தீ இனிது. நீர் இனிது. நிலம் இனிது.
ஞாயிறு நன்று. திங்களும் நன்று.
வானத்துச் சுடர்களெல்லாம் மிக இனியன.
மழை இனிது. மின்னல் இனிது. இடி இனிது.
கடல் இனிது. மலை இனிது. காடு நன்று.
ஆறுகள் இனியன.
உலோஹமும், மரமும், செடியும், கொடியும், மலரும்,
காயும், கனியும் இனியன.
பறவைகள் இனிய. ஊர்வனவும் நல்லன.
விலங்குகளெல்லாம் இனியன. நீர்வாழ்வனவும் நல்லன.
மனிதர் மிகவும் இனியர்.
ஆண் நன்று. பெண் இனிது.
குழந்தை இன்பம்.
இளமை இனிது. முதுமை நன்று.
உயிர் நன்று. சாதல் இனிது.

2

உடல் நன்று. புலன்கள் மிகவும் இனியன.
உயிர் சுவையுடையது.
மனம் தேன். அறிவு தேன், உணர்வு அமுதம்.
உணர்வே அமுதம்.
உணர்வு தெய்வம்.

3

மனம் தெய்வம், சித்தம் தெய்வம், உயிர் தெய்வம்,
காடு, மலை, அருவி, ஆறு,
கடல், நிலம், நீர், காற்று,
தீ, வான்,
ஞாயிறு, திங்கள், வானத்துச் சுடர்கள் எல்லாம் தெய்வங்கள்.
உலோஹங்கள், மரங்கள், செடிகள்,
விலங்குகள், பறவைகள், ஊர்வன, நீந்துவன,
மனிதர் – இவை அமுதங்கள்.

4

இவ்வுலகம் ஒன்று.
ஆண், பெண், மனிதர், தேவர்,
பாம்பு, பறவை, காற்று, கடல்,
உயிர், இறப்பு – இவை யனைத்தும் ஒன்றே
ஞாயிறு, வீட்டுச் சுவர், ஈ, மலையருவி,
குழல், கோமேதகம் – இவ்வனைத்தும் ஒன்றே.
இன்பம், துன்பம், பாட்டு,
வண்ணான், குருவி,
மின்னல், பருத்தி – இஃதெல்லாம் ஒன்று.
மூடன், புலவன், இரும்பு, வெட்டுக்கிளி – இவை ஒருபொருள்.
வேதம், கடல்மீன், புயற்காற்று, மல்லிகை மலர் –
இவை ஒரு பொருளின் பல தோற்றம்.
உள்ளதெல்லாம் ஒரே பொருள். ஒன்று.
இந்த ஒன்றின் பெயர் "தான்" (ஆத்மா)
தானே தெய்வம்.
தான் அமுதம், இறவாதது.

5

எல்லா உயிரும் இன்ப மெய்துக.
எல்லா உடலும் நோய் தீர்க.
எல்லா உணர்வும் ஒன்றாத லுணர்க.
"தான்" வாழ்க.
அமுதம் எப்போதும் இன்பமாகுக.

## 6

தெய்வங்களை வாழ்த்துகின்றோம்.
தெய்வங்கள் இன்ப மெய்துக. அவை வாழ்க.
அவை வெல்க.
தெய்வங்களே,
என்றும் விளங்குவீர், என்றும் இன்ப மெய்துவீர்;
என்றும் வாழ்வீர், என்றும் அருள் புரிவீர்,
எவற்றையும் காப்பீர்.
உமக்கு நன்று.
தெய்வங்களே,
எம்மை உண்பீர், எமக்கு உணவாவீர்,
உலகத்தை உண்பீர், உலகத்துக்கு உணவாவீர்,
உமக்கு நன்று.
தெய்வங்களே,
காத்தல் இனிது, காக்கப்படுதலும் இனிது
அழித்தல் நன்று, அழிக்கப்படுதலும் நன்று
உண்பது நன்று, உண்ணப்படுதலும் நன்று
சுவை நன்று, உயிர் நன்று, நன்று, நன்று.

## 7

உணர்வே, நீ வாழ்க. நீ ஒன்று. நீ ஒளி.
நீ ஒன்று. நீ பல.
நீ நட்பு. நீ பகை.
உள்ளதும் இல்லாததும் நீ.
அறிவதும் அறியாததும் நீ.
நன்றும் தீதும் நீ.
நீ அமுதம், நீ சுவை,
நீ நன்று. நீ இன்பம்.

சிறுகதை

# ஒரு காக்கை கவி பாடிய கதை

ஒரு நாள் மாலையில் குற்றாலத்துக்கருகே, ஒரு சிறு குன்றின் மீது ஒரு பெரிய விஸ்தாரமான ஆலமரத்தின் கிளைகளில் ஒன்றின் மேல், ஒரு காக்கை மிகவும் விசனத்துடன் உட்கார்ந்திருந்தது. அப்போது அதன் மனைவி அதன் சமீபத்தில் வந்து, "நீ எதன் பொருட்டு விசாரப்படுகிறாய்?" என்று கேட்டது. அப்போது ஆண் காகம் தன் பெண்டாட்டியிடம் சொல்கிறது: "இன்று காலை எனக்கு மித மிஞ்சிய தீவனம் கிடைத்து விட்டது. அளவறியாமல் உண்டு தீர்த்துவிட்டேன். எனவே, இப்போது வேட்டை மீது செல்லவும் மனங் கொள்ளவில்லை. சும்மா உட்கார்ந்திருப்போமென்றால், பொழுது போகவில்லை. மற்ற ஸ்நேகிதக் காகங்கள் இன்னும் வேட்டையிலிருந்து திரும்பி வரவில்லை. அவர்கள் வந்தால் கூட்டங் கூடி வம்பளப்பதிலே பொழுது போக்கலாம். சும்மா காற்று வழியாகச் சுகமாகப் பறந்து சுற்றிக் கொண்டு, நானாபக்கங்களிலும் நடக்கும் வேடிக்கைகளைக் கண்டு திரும்பலாம் என்றுத்தேசம் பண்ணுமிடத்தே சிறகு, கால், உடம்பு, தலை யெல்லாம் ஒரு விதமான் உளைச்சலும் கனமும் ஸஹிக்க முடியவில்லை. ஜ்வரம் வந்து விடும் போலிருக்கிறது. தொண்டை ரணகளமாக இருக்கிறது. வலி பொறுக்க முடியவில்லை. பலமான ஜலதோஷம் பிடித்திருக்கிறது.

நேற்றும் முந்தின நாளும் பக்கத்துக் காடுகளிலே சரியான தீனி கிடைக்கவில்லை. ஆகையால் கிழக்கே ஜனவஸதிகளில் நெடுந்தூரம் வரை சோற்றுக்காகப் போகும்படி நேரிட்டது. இருந்தும், மாலை வரை அரைவயிற்றுக்குக்கூட உணவு போதவில்லை. மழை இரவும் பகலும் இடைவிடாமல் பெய்தது. கோடை மழை. அதில் மிதமிஞ்சி நனைந்து போனேன். அதனாலே உடம்புக்கு பலமான ஜாட்யம் வந்து கொண்டிருந்தது. அதனுடன் இன்று காலை அஜீர்ணமும் கூடிவிட்டது. இந்த நிலையில் பொழுது போக்குவதற்கு என்ன செய்வே னென்பதைக் குறித்து விசனப்பட்டுக் கொண்டிருக்கிறேன்" என்றது. இது கேட்டுப் பெண் காகம் சொல்லுகிறது: "பல வருஷங்களுக்கு முன்பு, நீ என்னை விவாகம் செய்து கொண்ட காலத்தில் உனக்கு இவ்வுலகத்திலுள்ள எல்லா இன்பங்களைக் காட்டிலும் என்னுடன் கூடி அளவளாவிக் கொண்டிருப்பதே பெரிய இன்பமாகத் தோன்றுகிறதென்றும், எல்லாவிதமான பொழுது போக்குகளைக் காட்டிலும் என்னுடன் விளையாடிக் கொண்டிருப்பதிலே பொழுது போக்குவதுதான் அதிகப் பயனுடையதும் சுவையுடையதுமாக இசைந்திருக்கிற தென்றும், நீ என்னிடம் லக்ஷந் தரம் சொல்லியிருக்கிறாய். இப்போது என்னைப்

புறக்கணித்து விட்டு, நான் பக்கத்தில் இருக்கும்போதும், பொழுது போகவில்லை யென்று என்னிடத்திலேயே அழத் தொடங்கி என்னை அவமானப் படுத்துகிறாய். நான் பல நீர்ச்சுனைகளில் நாள்தோறும் என் முகத்தைப் பார்த்துக் கொண்டுதான் வருகிறேன். நமக்குள் விவாகம் நடத்திய காலத்தைக் காட்டிலும் இப்போது என் முகம் அதிக அழகாகத் தெரிகிறதேயல்லாமல், குறைந்த அழகுடையதாகத் தெரியவில்லை. என்னுடைய ஸ்நேகிதர்களிடமும் கேட்டேன். அவர்களும் நான் இப்போது முன்னைக் காட்டிலும் அதிக அழகு வாய்ந்திருப்பதாகவே சொல்லுகிறார்கள். உனக்கு மாத்திரம் என்னிடம் இப்படி வரம்பில்லாத அருவருப்புண்டாயிருப்பதின் காரணம் யாது?" என்று (பெண்டாட்டி) சொல்லிற்று. இதைக்கேட்ட காக புருஷன் "நீ முன்னைக் காட்டிலும் இப்போது அழகில் மிகுந்திருப்பதாகச் சொல்வோர் உன்னுடைய பெண் மித்திரரோ, ஆண் மித்திரர்களோ?" என்று வினவிற்று. "என்னுடைய ஸகிகளே அங்ஙனம் கேட்கிறார்கள். எனக்கு ஆண் ஸ்நேஹிதர் கிடையாது" என்று காகப் பேடு கரைந்தது. இதைக் கேட்டவுடன் ஆண் காகம் சிறகுகளைப் புடைத்துக் கொண்டு, அந்த ஆலமரக் கிளையினின்றும் புறப்பட்டுத் தென்றிசையை நோக்கிப் பறந்து சென்றது. பெண் காகமும் கூடவே பறந்து சென்றது. "கா கா" என்று கத்திக்கொண்டு பின்னே வந்த பெண்டாட்டியைக் காத்து நின்று ஸந்தித்து, ஆண் காகம், "நீ ஏன் என் பின்னே வருகிறாய்?" என்று கேட்டது. "நீ உடம்பு நோய் மிகுந்திருக்கையில் தனியாகப் போகிறாயே. இடை வழியில் உனக்கு ஒரு வேளை தலைக் கிறுக்கலுண்டாய் நீ கீழே விழுந்து விடக்கூடும். அதினின்றும் உனக்கு யாதாயினும் பேராபத்து விளையக்கூடும். அவ்விதமான ஸமயங்களில் உன் பக்கத்தில் நான் இருந்தால் அவ்வித விபத்துக்களைத் தடுத்து விடக்கூடு மாதலால், நானும் உன்னுடன் வருகிறேன்" என்று பெண் காகம் சொல்லிற்று. "ஓ! ஹோ! என்னைக் காக்கும் பொருட்டாகவா வருகிறாய்?"என்று ஆண் கேட்டது. "ஆம்" என்றது பேடு. "அப்படியானால் நீ வரவேண்டிய அவசியமில்லை. எனக்குச் சிறிது நேரத்திற்கு முன் உடம்பிலே யிருந்த கடுப்பு வலியும் ஆயாஸமும் இப்போது முற்றிலும் நீங்கிப் போய்விட்டன. நான் பரிபூரணமான ஆரோக்யத்துடனிருக்கிறேன். எனக்கு வழியில் மயக்கமுந் தோன்றாது. நான் கீழே விழவும் மாட்டேன். என்னை நரி தின்னவுஞ் செய்யாது. நீ என்னைக் காப்பாற்றவும் வேண்டியதில்லை. தயவுசெய்து வீட்டிலேயே இரு" என்று ஆண் சொல்லிற்று. "நீ எங்கே போகிறாய்?" என்று பேடு கேட்டது. "பக்கத்திலே விக்ரமசிங்க புரத்திற்குப் போகிறேன்" என்று ஆண் சொல்லிற்று. "ஹோ! விக்ரமசிங்கபுரம் பாபநாசத்துக்கு ஸமீபத்திலன்றோ இருக்கிறது? நெடுந்தூரம் ஆயிற்றே" என்றது பேடு.

"நான் ஓரிமைப் பொழுதில் அங்குப் போய் மீண்டு விடுவேன். நீ கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. வீட்டுக்குப் போ!" என்று சொல்லி ஆண் வற்புறுத்திற்று.

"நீ அங்கே இந்தச் சமயத்தில் எதன் பொருட்டாகப் போகிறாய்" என்று பேடு வினவிற்று.

இது கேட்டு ஆண் காகம் சொல்லுகிறது. "விக்ரமசிங்கபுரத்தில் வீரமாகாளப் புலவர் என்றொரு கவிராயர் இருக்கிறார். அவர் இந்த நேரத்திலே தமது வீட்டுப் பெண் குழந்தைகளுக்கும் ஆண் குழந்தைகளுக்கும் தமிழில் செய்யுள் கட்டும் வழிகள் கற்றுக் கொடுக்கிறார். எனக்கு மனித பாஷை பேசத் தெரியாதே யொழிய, அவர்கள் பேசுவதெல்லாம் நன்றாக அர்த்தமாகு மென்ற விஷயம் உனக்கு நன்றாகத் தெரியும். ஆகவே, அவர் வீட்டுக் கூரை மேலே போய் ஏறியிருந்து கொண்டு அந்தக் கவிராயர் சொல்லும் விஷயங்களை யெல்லாம் கேட்டுத் தெரிந்துகொண்டு, அப்பால் தமிழ்ப் பாஷையில் இருப்பதுபோலவே நமது காக பாஷையில் கவிதை சமைப்பதற்குரிய விதிகள் ஏற்படுத்தி நமது பாஷையைக் காவியங்களும் பாட்டுக்களுமுடையதாகச் செய்யப் போகிறேன். ஸ்வ தேசாபிமானமும் ஸ்வ பாஷாபிமானமும் இல்லாத காகத்தை ஒரு காக மென்று சொல்லுதல் தகுமா? அதைப் பறந்து தீனி தின்று திரியும் கருஞ் சிறு பிணமென்றுதான் சொல்ல வேண்டும். இந்தக் குற்றாலத்துக் காட்டைப்போல் பரிசுத்தமும், மேன்மையும் செழிப்பும் எக்காலமும் அழியாத தன்மையுமுடைய காடு இந்த உலகத்தில் வேறெங்கும் கிடையாது. நமது காக பாஷையைப் போல் மாண்புயர்ந்த பாஷையுங் கிடையாது. நான் பிறந்த அளவில் இந்தக் காட்டுக்கும் இந்தப் பாஷைக்கும் என்னால் இயன்ற உபகாரம் செய்யுமுன்பு உயிர் துறப்பேன் ஆனால் எனக்கு நெஞ்சு வேகாது. ஆதலால் இந்தக் காக பாஷையைக் கவிதையுடையதாகச் செய்யும் பெருங்கடமையை நான் நிர்வஹித்திருக்கிறேன்" என்றது. இது கேட்ட பெண் காகம் "ஒரு வினாடிக்கு முன்னே காக பாஷை ஒப்பில்லாத பாஷை என்று சொன்னாய். இப்போது தமிழைப் பார்த்துத் தமிழ் வழியைத் தழுவிச் செய்யுள் சேர்ப்பதாகிய சீர்த்திருத்தம் செய்யவேண்டுமென்கிறாயே எனவே, தமிழைக் காட்டிலும் (காக பாஷை) குறைந்தது என்று அங்கீகாரம் செய்கிறாயா?" என்றது. இது கேட்ட ஆண் காகம் "தமிழ் மனுஷ்ய பாஷை. அதற்கு ஸமானமாக நமது பாஷை ஏற்படுதல் ஸாத்யப்படுமா? இதர ஐந்து பாஷை களெல்லாவற்றைக் காட்டிலும் நமது காக பாஷை சிறந்ததென்றன்றோ நான் சொன்னேன்? சரி. நேரமாய் விட்டது. நான் போகவேண்டும். நீ வீட்டுக்குப் போ" என்றது. அப்போது பெண் காகம் சொல்லுகிறது "நீ இந்த விஷயத்துக்காக விக்ரமசிங்கபுரத்திற்குப் போகவேண்டாம். என்னுடன் வீட்டுக்கு வா. நான் கற்றுக் கொடுக்கிறேன். எனக்குத் தெரியும்" என்றது

"உனக்கென்ன தெரியும்?" என்று ஆண் காகம் சற்றே சினத்துடன் வினவிற்று.

"கவி பாடுதற்குரிய விதிகள்" என்றது பேடு.

"அவற்றை நீ அறிந்த தெங்ஙனம்?" என்று ஆண் காகம் கேட்டது.

பெண்காகம் சொல்லுகிறது "உனக்குத் தோன்றிய விருப்பம் உனக்குத்தான் முதல்முதல் தோன்றிற்று என நீ கருதியிருக்கிறாய் போலும். ஆனால், உண்மை அப்படியில்லை. என்னுடைய பிதாவும் இதே விருப்பமுடையவராக இருந்தார். ஒரு மனுஷ்ய கவிராயர் தம்முடைய சீடர்களுக்குக் கற்றுக் கொடுக்கையிலே அவர் வீட்டுக் கூரை மேலே போய் என் பிதா போய் தினந்தோறுங் கேட்டுப் படித்து வந்தார். இப்படி ஒரு நாள் தவறாமல் ஆறு மாஸம் சென்று வந்தார்.

கடைசியாக இவருக்குத் தமிழ்ச் செய்யுளிலக்கணம் பிடிபட்டுப் போய்விட்டது. அப்பால் என் பிதா தமிழ்ச் செய்யுள் முறைகளை யனுஸரித்துக் காக பாஷையிலே ஒரு செய்யுள் இலக்கணம் கற்பித்தார். காக பாஷையில் பாட்டுக்கள் ஆயிரம் வகைகளிலே பாடுவதற்குரிய விதிகள் ஏற்படுத்தியிருந்தார். அதையெல்லாம் நமது காக ராஜன் ஸந்நதியில் அரங்கேற்று முன்னாகவே அவர் இறந்து போய்விட்டார். ஆதலால், புதிய சாஸ்த்ரம் எங்கள் வீட்டுக்குப் புறம்பே பரவ வழியில்லாமல் போய்விட்டது. என் பிதாவுக்கு நான் ஒரு மகள்தான் பிறந்தேன். என்னைத் தவிர வேறு பெண் குழந்தையேனும் ஆண் குழந்தையேனும் ஜனிக்கவே யில்லை. நான் பெண் ஜன்மமாதலால், ராஜ ஸபையில் இந்தப் புதிய சாஸ்த்ரத்தைக் கொண்டுபோய் அரங்கேற்றிக் காக பாஷைக்கொரு புதிய ஒளியும் எனக்குத் தீராத கீர்த்தியும் ஏற்படுத்திக் கொள்ள இடமில்லாமல் தடுக்கப்பட்டிருக்கிறேன். அதை நான் உனக்குக் கற்றுக்கொடுக்க மிகவும் ஸம்மதமுடையவளாக இருக்கிறேன். நீ என்னிடம் கற்றுக்கொண்டு ராஜ ஸபையிலே போய் அரங்கேற்றலாம். அதனால் உனக்கு ராஜ ஸபையில் மிகுந்த ஸம்மானமுண்டாகும். உலகத்திலும் பெரிய கீர்த்தி உண்டாகும். என்னுடன் வீட்டுக்கு வா. இன்று முதல் உனக்குத் தினந்தோறும் இரண்டு மணிநேரம் கற்றுக்கொடுக்கிறேன். இரண்டு மாஸங்களில், ராஜாவின் ஸபையில் உனக்கு உயர்ந்த ஸம்மானங்கள் கிடைக்கும்படி ஏற்பாடு செய்து விடுகிறேன்" என்றது.

இது கேட்டு ஆண் காகம் "நான் குடியரசுக் கக்ஷியைச் சேர்ந்தவன். ராஜ ஸபையில் வாங்கும் ஸம்மானங்கள் எனக் கவஸரமில்லை" என்றது.

"சரி. அது வேண்டாவிட்டாலும், நீ ஆரம்பத்தில் சொல்லியபடி உன்னாலே காக பாஷைக்கு ஒரு புதிய மஹிமையும், உனக்கென்றும் அழியாத கீர்த்தியும் கிடைக்குமன்றோ? அதற்காகவேனும் என்னுடன் வா. நான் உனக்குக் கவிதைத் தொழில் கற்பித்துக் கொடுக்கிறேன்" என்றது.

ஆண் காகம் ஸம்மதப்பட்டது. அவ்விரண்டும் தமது வீட்டிற்கு, அதாவது, தமது கூட்டுக்குத் திரும்பச் சென்று கொண்டிருக்கையிலே அவற்றின் தலைக்கு மேலே சிறிது தூரத்தில் மன்மதன் பறந்து சென்று கொண்டிருந்தான். ஆணும் பெண்ணும் கூடியிருக்க விரும்புமாறு வற்புறுத்த விரும்பும் இயற்கையின் சாட்டையடிகள் போலே மேற்கு மலைச்சாரலில் சாரல்மழை தூற்றும் பருவம் அப்போது நிகழ்ச்சி கொண்டிருந்தது.

மன்மத தேவனுக்கு இப்படிப்பட்ட பருவங்களில், இப்படிப்பட்ட பிரதேசங்களில் வேலை மூச்சை முட்டுமாதலால், அன்று மாலை அவன் சீக்கிரமாகவே தன் தூணியிலிருந்த அம்புகளில் பெரும்பகுதியைச் செலவிட்டு விட்டு, ஒன்றிரண்டு தவறுதலாக அவன் மேலேயே வீழ்ந்துவிட்ட காரணத்தாலோ, வேறெக் காரணத்தாலோ - அன்று மாலையில் அவன் தன் காதலியாகிய ரதிதேவியின் ஸல்லாபத்தை வேண்டித் தன் உலகத்துக்குச் சென்று கொண்டிருந்தான். இரண்டே இரண்டு கணைகள் மாத்திரமே அவனுடைய கூட்டில் மிஞ்சியிருந்தன. அவற்றை லீலார்த்தமாக மேலே சொல்லப்பட்ட ஆண் - பெண் காகங்களின் மீது தலைக்கொன்றாக அழுத்திவிட்டுப் போனான். கூட்டுக்குப் போகும் முன்னமேயே ஆண் காகமும் பேடும் ஒன்றையொன்று முத்தமிட்டுக் கொஞ்சத் தொடங்கிவிட்டன. கூட்டுக்குள் நுழைந்த மாத்திரத்திலே காதல் வெறி வரம்பு கடந்துபோய்விட்டது.

கவிதைத் தொழில் படிக்க வேண்டுமே என்ற ஞாபகமே, ஆண் காகத்தின் உள்ளத்தினின்றும் எடுபட்டுப் போய்விட்டது. காலை ஸூர்யோதயம் வரை அவை யிரண்டும் மதன லீலாஸங்கங்களிலே பொழுது போக்கிக் கொண்டிருந்தன.

காலையில் இரண்டும் கோரமான நித்திரைக்குட்பட்டு, மறுநாள் மாலையிலே கண் விழித்தன. சற்றே இரை தேடுமுன், அன்றைக்கும் மன்மதன் அந்த வழியே போனான்.

அன்றைக் கதையும் முதல் நாள் போலவே ஆயிற்று.

இங்ஙனம் நெடுநாள் நடந்து வந்தது. ஆண் காகத்துக்குக் காக பாஷையில் யாப்பிலக்கணம் சேர்க்க வேண்டுமென்பதி லிருந்த ஆவல் இல்லாமலே ஒரேயடியாக மறந்து போய்விட்டது.

காகம் கவிதைத் தொழில் படிக்கவே யில்லை. மதன சாஸ்த்ரம் படிக்கத் தொடங்கிவிட்டது

**கால வரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள்-11**

# கோவில் யானை

## நாடக பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| சூரியகோடி | - | அமரபுரத்து அரசன். |
| வஜ்ரி | - | அந்த அரசனுடைய ஒரே குமாரன். |
| நித்தியராமன் | - | அமரபுரத்தில் ஒரு பெருஞ்செல்வன். |
| ரணதீரன் | - | அந்த நாட்டுக் குதிரைப்படைத் தலைவரில் ஒருவன். |
| சாத்தன் | - | அமரபுரத்துக் காளி கோயில் பூசாரி. |
| சந்திரவர்மன் | - | அங்க தேசத்து அரசன் மகன்; வஜ்ரிக்குத் தோழன். |
| வஜ்ரலேகை | - | நித்தியராமன் மகள்; வஜ்ரியின் காதலி. |

மந்திரிகள், சேனாதிபதிகள், வேலையாட்கள், தோழிகள் முதலியோர்.

# காட்சி 1

(அமரபுரத்தில் மிகக் கீர்த்தியும் செல்வமும் உடைய காளிகோயிற் புறத்தே விரிந்த பூஞ்சோலை; சுனைகளும் தடங்களும் நீரோடைகளும் நெருங்கி ஒளிர்வது. அங்கு ஒரு லதாமண்டபத்தில் வஜ்ரலேகை தனியே வீற்றிருக்கிறாள். முன் மாலைப் பொழுது; மிக அழகிய வெயிலொளி.)

**வஜ்ரலேகை:** *(தனக்குள்ளே பேசிக் கொள்ளுகிறாள்.)* நல்லையடா நீ! விதியே, நல்லை நீ. ஐந்து பிராயம் ஆகுமுன்னே என் தாயைக் கொன்று விட்டாய். என் பிதா தம்முடைய செல்வங்களையும் கவலைகளையும் ஒருங்கே ஒன்று, பத்து, நூறாயிரமாகப் பெருக்குவதிலேயே எப்போதும் ஈடுபட்டுப் போயினர். என்னைத் தவிர வேறு யாருக்கும் தம்பிடி செல்வம் உடைமையாகி விடாதபடி காக்கும்பொருட்டுத் தாம் இரண்டாந்தாரம் விவாகம் செய்யாமல் நிறுத்திக் கொண்டார். என்பொருட்டே தாம் உயிர்த்திருப்பதாகச் சொல்கிறார். என் குழந்தைகளும், என் புருஷனும், நானும் சந்தோஷமாக வாழ்ந்திருப்பதைத் தாம் பார்த்துவிட்டுத்தான் சாக வேண்டும் என்ற எண்ணம் வைத்திருக்கிறார்.

அந்த எண்ணம் அவர் மனத்தை அட்டை போலக் கௌவிக்கொண்டிருக்கிறது. நல்ல வேளை! எனக்கு இன்னும் கணவனும் குழந்தைகளும் ஏற்படவில்லை. அந்த நிலைமை இன்றைக்கு ஏற்பட்டால், அவர் அதைப் பார்த்துவிட்டு இன்றைக்கே இறந்துபோய்விடுவார் என்று தோன்றுகிறது. மேலும், இந்த எண்ணத்தை வைத்துக் கொண்டு, விரைவில் மணம் புரிந்துகொள்ளும்படி என்னைச் சதா அரித்துக் கொண்டே இருக்கிறார். செல் அரிப்பதுபோல் அரிக்கிறார். எனக்கோ வயது பதினாறு கழியவில்லை. ஆண்மக்களும் பெண்மக்களும் என்னை மிக அழகுடையவளென்று கருதுகிறார்கள். இந்தத் தேசத்து அரசன் மகனும், மகா சுந்தர புருஷனும், இளம் பெண்களால் பிரத்தியட்ச மன்மதன் என்று போற்றப்படு வோனுமாகிய வஜ்ரி என்மீது பெருங்காதல் கொண்டிருக்கிறான். இப்படி எல்லா வகையிலும் குறைவின்றி இருக்கும் என் மனத்தைக்கூட விதியே, அடா விதியே, விதியே, பாழ்த்த விதியே, நீ ஓயாமல் தீயிடைப்பட்ட புழுவைப்போலே துடித்துக் கொண்டிருக்கும்படி செய்வாயெனில் பொருளில்லார், அழகில்லார், மிடிமைக்கும் நோய்களுக்கும் இரைப்பட்டார் - மற்றைய மாதர்களின் மனத்தை என் படச் செய்வாயோ

அறிகிலேன். கணவரை இழந்து, பொருளும் இன்றி, அழகும் இளமையும் தவறிய ஸ்திரீகள், காதல் சுவை இனியில்லையென்று தீர்ந்த நிலையுடையோர் எத்தனை ஆயிரம், எத்தனை லக்ஷம், எத்தனை கோடி! அவர்களுடைய அக வாழ்க்கை எங்ஙனம் இயலுகிறதோ? அவர்கள் மனத்தை எத்தனை கவலைப் புழுக்கள் அரிக்கின்றனவோ? அவர்கள் எங்ஙனம் ஆவி தரித்து நிற்கின்றனரோ அறிகிலேன். ஆ! இளமை கழிந்த பிறகும் காதல் சாகாதன்றோ? மனிதர், விதவைகளாகும்படி பலாத்காரம் செய்தாலும் இயற்கை நெறி மாறுமா? எல்லா உயிர்களுக்கும் எப்படியாவது சிறிது சிறிது சுகம் கிடைக்கத்தான் செய்யும். மேலும், உலகத்தில் இன்பம் யாருக்குமே இல்லை என்றும், இவ்வுலகம் எல்லா உயிர்களுக்கும் எப்போதுமே துன்ப மயந்தான் என்றும் இந்தக் கோயில் தலைவியாகிய விலாஸினி சொல்வதுதான் ஒருவேளை உண்மையோ எப்படியோ?

அப்போது, எனக்குள்ள செல்வமும் இளமையும் பேரழகும் எனக்கு இன்பந் தராமல் இருப்பது வியப்பாக மாட்டாதன்றோ?

ஹூம்! அப்படி இராது; இந்த உலகத்தில் ஏற்படக்கூடிய பலவகைத் துன்பங்களுக்குச் செல்வம் முதலியன மருந்தாகு மென்பதில் ஐயமே இல்லை. இன்பம் தவறாமல் இருப்பதற்கு வேண்டிய சௌகரியங்கள் பெரும்பாலும் நமக்கு இருக்கின்றன. இன்னும் எங்கேயோ ஒரு குறை இருக்கிறது. அதைக் கண்டுபிடித்து நிவிருத்தி செய்துவிடவேண்டும். இந்த உலகம் மாற்றவொண்ணாத துன்ப இயற்கையுடையது என்போரின் வார்த்தையை நான் நம்பவே மாட்டேன்; மாட்டேன்; மாட்டேன்; மாட்டேன்! இங்கு நித்திய இன்பம் கண்டுபிடிக்க முடியுமென்று நமது வேதாரண்ய குரு சொல்வதையே நான் நம்புகிறேன்.

ஆனால், அங்ஙனம் இன்பம் எய்தாதபடி நம்மைத் தடுக்கும் குறை எது என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும்.

*(இவ்வாறு தன் மனத்துள்ளே பேசி வருகையில், கடைசி வசனம் அவளையும் மீறி உரத்த குரலில் வந்துவிட்டது. அப்போது அங்கு ரணதீரன் வருகிறான்.)*

**ரணதீரன்:** பெண்ணே, உனக்கு நல்ல காதலன் இல்லாத குறைதான் இருக்கக்கூடியது. *(நகைக்கிறான்.)*

**வஜ்ரலேகை:** நீர் யார்?

**ரண:** அமரபுரத்து வேந்தனுடைய குதிரைப்படையில் நான் ஒரு தளகர்த்தன்.

**வஜ்ர:** இங்கு ஏன் வந்தீர்?

**ரண:** கோவிலுக்குப் பூஜைக்காக வந்தேன். மாலைப் பொழுது மிக இனிமையாகத் தோன்றிற்று. சோலையில் சிறிது நேரம் உலாவி மகிழ்வோம் என்ற எண்ணத்தால் இப்புறம் வந்தேன். இங்கு வந்து நெடுநேரமாக நிற்கிறேன். உன் முகத்தையே பார்த்துக் கொண்டு நின்றேன். ஆனால் இதுவரை நீ என்னைத் திரும்பிப் பார்க்கவில்லை. ஏதோ, ஆழ்ந்த யோசனையில் இருக்கிறாய் என்று தெரிந்து கொண்டேன். கடைசியாக ஒரு வார்த்தை இரைந்து சொன்னாய். அதற்கு மறுமொழி சொன்னேன்.

**வஜ்ர:** நல்லது; நீர் போய் வரலாம்.

**ரண:** கண்மணியே, நின்மீது நான் கரை கடந்த காதலுடையேன்.

**வஜ்ர:** இங்கு நில்லாமல் போம்.

**ரண:** நான் இந்நகரத்துக் குதிரைப் படையில் ஒரு தளபதி. என் பிதா பெரிய சேனாபதிகளில் ஒருவராக இருந்து, சமீபத்திலே நடந்த வங்கத்துப் போரில் மிக வீரத்துடன் உயிர் துறந்தார். எனக்குச் சைனியத்தில் நல்ல மதிப்பு இருக்கிறது. அரசன் நேரே என்மீது மிக்க அன்பு வாய்ந்தவன். ஆதலால் என்னை யாரோ ஒரு சாதாரண மனிதனாகக் கருதி நீ பேசுவது சரியல்ல. நான் உன்னைக் காதல் செய்வதால் உனக்கு எவ்வித அவமானமும் விளையாது. நான் உன்னை உலகறிய மணம் புரிந்துகொள்ளும் நோக்கமுடையேன். குலத்தில் க்ஷத்திரியன். நாட்டில் உயர்ந்த உத்தியோகம் வகிக்கிறேன். ஆதலால் நீ என்னை எவனோ கதியற்றவனென்று கருதிப் பேசுவதை நிறுத்தி எனக்கு அருள்புரிய வேண்டும். உன்னை யன்றி உறுபுகல் வேறில்லை. உன்னைக் கண்ட அளவிலே காதல் கொண்டேன். இது **முதற்காட்சியில் விளைந்த காதல்.** இதுவரை எத்தனையோ ஆயிரம் மகளிருடனே பழகியிருக்கிறேன். எவளிடத்தும் என் மனம் இங்ஙனம் வீழ்ச்சி பெற்றதில்லை. நீ எனக்குக் கடவுள் காட்டிய பெருங்களிக் கோலம். என்னை இகழாதே! என்னைத் துரத்தாதே; என்மீது கருணை கொள். என்னைக் காதல் செய். எனக்கு நீயே கதி.

**வஜ்ர:** நீர் இங்கிருந்து போக உடம்படுகிறீரா, இல்லையா?

**ரண:** நீ நான் கேட்டதற்கு இரண்டில் ஒன்று மறுமொழி சொல். பிறகு நான் போய் விடுகிறேன்; நீ என்னைக் காதல் புரிந்து மணம் செய்துகொள்ள உடம்படுகிறாயா, இல்லையா?

**வஜ்ர:** நான் உம்மை மணம் புரிதல் சாத்தியப்படாது.

**ரண:** ஏன்?

**வஜ்ர:** நான் மற்றொருவனுக்கு என் சுகத்தை ஏற்கெனவே வசப்படுத்தி விட்டேன்.

**ரண:** அவன் யாவனோ?

**வஜ்ர:** அவன்... அவன்... அவன்... இந்நகரத்தரசன் மகன், வஜ்ரி.

*(அந்தச் சமயத்தில் வஜ்ரி வருகிறான். அவனைக் கண்டவுடன் ரணதீரன் கைகூப்பி வணங்குகிறான்.)*

**வஜ்ரி:** கண்மணி! என் பெயரை எதற்காகச் சொல்லுகிறாய்? இந்த – நின் பெயர் என்ன தம்பி? ரணதீரனன்றோ? ஆம் – இந்த ரணதீரனை உனக்கு முன்னமே தெரியுமா?

**வஜ்ர:** நான் இவரை இதற்கு முன் பார்த்ததில்லை. இப்போதுதான் இவர் இங்கு வந்தார். "யார் பொருட்டுக் காத்திருக்கிறாய்?" என்று என்னிடம் கேட்டார். ஆதலால் நின் பெயரைச் சொன்னேன். நீ ஏன் இத்தனை கால தாமதப்பட்டு வந்தாய்?

*(ரணதீரன் வணங்கி விடை பெற்றுச் செல்கிறான்.)*

**வஜ்ரி:** நான் அம்மன் கோயில் யானையுடன் விளையாடிக் கொண்டிருப்பதில் எதிர்பார்த்ததற்கு மேல் அதிகப் பொழுது செலவிடும்படி நேர்ந்துவிட்டது. அங்கதேசத்து வேந்தன் மகன் சந்திரவர்மன் இந்நகரத்துக்கு வந்திருக்கிறான். அவனையும் கோயிலுக்கு அழைத்து வந்தேன். நானும் யானையும் விளையாடுவதைப் பார்த்து அவன் சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தான். அவன் மனம் விகற்பப்படாமல் அவனுக்கு உபசாரங்கள் செய்து அவனை அனுப்பிவிட்டு நேரே இங்கே வருகிறேன். அது நிற்க. நீ ஏதோ அஞ்சினவள் போலே காணப்படுகிறாயே. அந்த ரணதீர மூடன் நீ பயப்படும்படி ஏதேனும் செய்தானா? அப்படியானால் சொல்; அவனை இப்பொழுதே தேடிக் கொண்டு வரும்படி செய்து தக்க சிக்ஷை விதிக்கிறேன்.

**வஜ்ர:** அவன் தவறாக நடக்கவில்லை. நீ என்னை எப்போது மணம் புரிந்து கொள்ளப் போகிறாய்?

**வஜ்ரி:** என் கண்ணே, சந்திரவர்மனுடைய தங்கையை மணம் புரிந்து கொள்ளும்படி என் பிதா வற்புறுத்துகிறார். அந்த விஷயத்துக்காகத்தான் சந்திரவர்மனும் இங்கு வந்திருக்கிறான். நான் எப்படியாவது தந்திரம் பண்ணி அதைக் கலைத்து

விடுகிறேன். பிறகு உடனே உன் விஷயத்தைப் பற்றி என் பிதாவுடன் பேசி அவரை நமது மணத்துக்கு இணங்கும்படி செய்துவிடுவேன். நீ பயப்படாதே. அடுத்த தை மாஸத்தில் நாம் மணம் புரிந்துகொள்வோம். அதுவரை, கருணை கூர்ந்து பொறுத்திரு.

**வஜ்ர:** ஏற்கெனவே நீ என் மீது காதல் கொண்டிருப்பதனால், அங்கத்தரசன் மகளை மணம் புரிவது சாத்தியம் இல்லை என்று இப்போதே உன் பிதாவிடம் தெளிவாகவும் வெளிப்படையாகவும் நீ ஏன் சொல்லிவிடக் கூடாது?

**வஜ்ரி:** அங்ஙனம் சொல்லுதல் இப்போது சாத்தியம் இல்லை. என்னுடைய பிதாவின் குணம் உனக்குத் தெரியாது. அவர் வழியிலேயே நாம் விட்டுத் திருப்புவதுதான் அவரிடம் காரியத்தை வெல்லும் வழி.

*(இருவரும் பிரிந்து செல்லுகின்றனர்.)*

## காட்சி 2

*(நித்தியராமன் வீடு. காலை நேரம். நித்தியராமன் காலையுணவு கழித்துச் சந்தோஷமாகத் தாம்பூலம் தரித்துக்கொண்டிருக்கிறான். அப்பொழுது அவனிடம் ஒரு வேலையாள் வந்து சொல்லுகிறான்.)*

**வேலையாள்:** ஐயனே, தங்களைத் தரிசனம் செய்ய வேண்டுமென்ற கருத்துடன் வெளியே ஒருவர் வந்து காத்திருக்கிறார்.

**நித்தியராமன் :** பெயர் விசாரித்தாயா?

**வேலையாள்:** இல்லை; பார்த்தால் சைனியத்தைச் சேர்ந்தவர் போலே தோன்றுகிறது.

**நித்திய:** ஓஹோ! அப்படியானால் உடனே வரச்சொல்.

**வேலையாள்:** கட்டளைப்படி.

*(உடனே சில க்ஷணங்களில் ரணதீரன் வந்து புகுகிறான்.)*

**நித்திய:** தாங்கள் வெகு நேரமாகக் காத்திருக்கிறீர்களா? உட்காருங்கள். தங்கள் பெயர் யாது?

**ரண:** இப்போதுதான் வந்தேன். என் பெயர் ரணதீரன். நான் இந்நகரத்து அரசனுடைய குதிரைப்படைத் தலைவரில் ஒருவன்.

**நித்திய:** இங்கு எதன்பொருட்டு விஜயம் செய்தீர்கள்?

**ரண:** தங்களிடம் ஒரு வரம்கேட்கும் பொருட்டு.

**நித்திய:** என்ன வரம்?

**ரண:** தங்கள் குமாரியை எனக்கு மணம் புரிவிக்க வேண்டும்.

**நித்திய:** ஓ! ஐயமின்றி நடத்தலாம். உம்மைப் பார்த்தால் ஆணுக்கு ஆண் மையலுறத் தக்க அழகுடன் விளங்குகிறீர். உயர்ந்த உத்தியோகம் பார்க்கிறீர். அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பதுபோல் உம்முடைய முகத்தை நோக்கிய அளவில் நல்ல குணவான் என்று தெரிகிறது. அப்படியே செய்யலாம். ஆனால், அந்தப் பெண்ணுடைய சம்மதத்தையும் தெரிந்துகொள்ள வேண்டும். அவளுக்கு ஒரு தக்க வரன் தேடிக் கொடுத்து, அவள் தன் கணவனுடனும் குழந்தைகளுடனும் மகிழ்ந்து வாழ்வதைக் காணும் பொருட்டாகவே நான் இன்னும் உயிர் தரித்திருக்கிறேன். எனக்கு இவ்வுலகத்தில் வேறு எவ்விதமான பற்றுதலும் இல்லை.

அவளை நீர் நேரே பார்த்து அவளுடைய சம்மதத்தைத் தெரிந்து கொண்டீரா? இளம்பிள்ளைகள் - அதிலும் இக்காலத்துப் பிள்ளைகளுக்கு இதெல்லாம் சொல்லிக் கொடுக்க வேண்டுமா? அல்லது இப்போதே இங்கு அவளை வரவழைத்துக் கேட்போமே? யாரடா, ஏ வேலையாள்!

**ரண:** ஹா, ஹா, ஹா, வேண்டாம், வேண்டாம்! வேலையாளைக் கூப்பிடாதேயுங்கள். அவளையும் இப்போது இங்கே அழைப்பித்தல் வேண்டாம். தாங்கள் அவளிடம் தனியாகப் பேசி என்னை மணம் புரிந்து கொள்ளச் சொல்ல வேண்டும். அவள் என்னை ஏற்கெனவே பார்த்திருக்கிறாள். என்னை ஒருவாறு விரும்பவும் செய்கிறாள் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், வேறொரு கொடிய துஷ்டனுடைய மயக்கத்தில் வீழ்ந்திருக் கிறாளாதலால் என்னை மணம் புரிய இயலாது என்கிறாள். அவன் வெறுமே இவளை மயக்கித் தன் இஷ்டம் போல் சிறிது காலம் வைத்துக்கொண்டிருந்து, அப்பால் சாற்றை உறிஞ்சிக் கொண்டு பழத்தோலை எறிந்துவிடுவது போலே இவளை எறிந்துவிடக் கருதியிருக்கிறான். அவன் இவளைச் சடங்குகளுடன் சாஸ்திரோக்தமாக மணம் புரியப் போவதில்லை. அவனால் அங்ஙனம் செய்ய முடியாது.

**நித்திய:** அவன் யார்? அவன் யார்? யார் அந்தப் பாதகன்?

**ரண:** அதை நான் சொல்லமாட்டேன். பின்னிட்டுத் தங்களுக்கே தெரியும். இந்தச் செய்தியை நான் சொன்னதாகக் கூடத் தங்கள் குமாரியிடம் தாங்கள் தெரிவிக்கக் கூடாது. தெரிவித்தால் காரியம் கெட்டுப் போகும். என்னை அவள் மணம் புரிய வேண்டியது தங்கள் விருப்பம் என்பதை மாத்திரம் வற்புறுத்த வேண்டும். நான் இப்போது போய், நாளைக் காலையில் வருகிறேன். அப்போது எனக்கு முற்றும் அநுகூலமான உத்தரம் கொடுப்பீர்களென்று நம்புகிறேன்.

**நித்திய:** நல்லது, நீர் போய் வாரும். நல்ல சமயத்தில் எச்சரிக்கை கொடுக்க வந்தீர். பெரிய உபகாரம் செய்தீர். உமக்கே என் பெண்ணைக் கொடுக்கிறேன். யோசனை வேண்டுவதில்லை.

(*ரணதீரன் போகிறான்.*)

**நித்திய:** யாரடா, வேலையாள்!

(*வேலையாள் வருகிறான்.*)

**வேலையாள்:** ஐயனே, யாது கட்டளை?

**நித்திய:** வஜ்ரலேகையை அழைத்து வா.

**வேலையாள்:** குழந்தை வஜ்ரலேகை வீட்டில் இல்லை. சிறிது நேரத்துக்கு முன்புதான் வெளியே ஒரு தோழியுடன் சென்றாள். காளிகோயில் பெரிய பூசாரி வீட்டுக்குப் போயிருப்பதாகத் தோன்றுகிறது.

**நித்திய:** சரி; நீ போ. (*வேலையாள் சென்ற பிறகு நித்தியராமன் தனக்குள்ளே யோசனை செய்கிறான்.*) நாமும் அங்கேதான் போய்ப் பார்ப்போம். அந்தப் பூசாரி யோகியென்றும், மந்திரவாதியென்றும் பிரசித்தி அடைந்திருக்கிறான். அவனிடம் இந்தப் பெண்ணுடைய எதிர்கால வாழ்க்கையைப்பற்றி விசாரணை செய்யலாம். இவள் அங்கே போன நோக்கத்தையும் தெரிந்து வரலாம். என் வஜ்ரலேகையின் உள்ளத்தை மயக்கி அவளை வீழ்த்த விரும்புவதாக ரணதீரனாலே தெரிவிக்கப்பட்ட பாதகனைப் பற்றிய உளவுகளும் அங்கே கிடைக்கலாம் என்று தோன்றுகிறது.

(*புறப்படுகிறான்.*)

# காட்சி 3

*(ராஜா சூரியகோடியின் அரண்மனையில் ஓர் அறை. அங்கு அரசன் தனியே ஒரு பொன்னாசனத்தின் மேல் வீற்றிருக்கிறான். அவனெதிரே மற்றோர் ஆசனத்தில் காளி கோயில் பெரிய பூசாரியாகிய சாத்தன் இருக்கிறான்.)*

**சூரியகோடி:** இத்தனையும் மெய்தானா?

**சாத்தன்:** ஆம்.

**சூரிய:** இல்லையெனில்?

**சாத்:** என்னைச் சிரச்சேதம் செய்துவிடலாம்.

**சூரிய:** சரி. உண்மையென்று வைத்துக் கொள்வோம். இதைத் தடுக்க வழியில்லையா?

**சாத்:** எதைத் தடுக்க?

**சூரிய:** எல்லாவற்றையும். முதலாவது, நம் மகன் வஜ்ரி அந்தச் செட்டி மகளை மணம் புரியாதபடி தடுக்க வேண்டும்.

**சாத்:** அதற்கு வழி நான் அறியேன்.

**சூரிய:** உன் பலம், உன் சாஸ்திரபலம், உன்னுடைய கிரக நக்ஷத்திரங்களின் பலம் இத்தனையையும் கொண்டு இதைத் தடுக்க முடியாதா? தள்ளும், நான் செய்கிறேன்.

**சாத்:** தங்களால் முடியாது.

**சூரிய:** அது எப்படி?

**சாத்:** மனிதர், பூதங்கள், தேவகணங்கள், யாவராலும் காதலின் வலிமையைக் கடக்க முடியாது. தங்களுடைய குமாரனும் அப்பெண்ணும் தம்முள்ளே மெய்யான காதல் கொண்டிருக்கின்றனர்.

**சூரிய:** எப்படி? எப்படி? மெய்க்காதலா? அதன் இயல்பு என்னே? எங்குளது? அதனைக் காவியங்களிலன்றி நாம் உலக வாழ்க்கையில் காண்பதில்லை. தோன்றி மறையும் விருப்பமே இயற்கையில் உள்ளது. அது மெய்க்காதலாகா தன்றோ?

**சாத்:** காவியத்துக் காதல் எங்ஙனமோ தங்கள் மகனுக்கும் அச்செட்டி மகளுக்குமிடையே மூண்டுவிட்டது.

**சூரிய:** அதைத் தடுப்பேன். தடுத்தே தீர்வேன்.

**சாத்:** முடியாது; முடியவே முடியாது.

**சூரிய:** என் சொல்லுக்கு இணங்காவிடின் வஜ்ரிக்குப் பட்டம் இல்லை என்று நீக்கிவிட்டு மற்றொரு குமாரனை ஸ்வீகாரம் செய்து கொள்வேன். என் விருப்பத்தைக் கேள். அந்த ரணதீரன் என்ற குதிரைப் படைத்தலைவன் செட்டி மகளாகிய வஜ்ரலேகையை மணம் புரிந்து கொள்ள வேண்டும். நமது வஜ்ரி அங்கதேசத்து அரசன் மகளை மணம் புரிந்துகொள்ள வேண்டும். இப்படி நடந்தால் எல்லோர் மனமும் திருப்தி அடையும். இவ்விரண்டு விவாகங்களையும் இந்த மாத முடிவுக்குள்ளேயே நடத்திவிடலாம் என்று நினைக்கிறேன். இது என் தீர்ப்பு. இதை நீ இப்போதே போய் வஜ்ரி, செட்டி, ரணதீரன் எல்லோருக்கும் தெரிவித்துவிடு. என் ஆக்கினையைக் கடந்து என் நாட்டில் ஒன்றும் நடக்கக் கூடாது.

**சாத்:** ஐயனே, ஹூண தேசத்திலிருந்து, சிறிது காலத்துக்கு முன்பு ஒரு படிப்புள்ள வியாபாரி இங்கு வந்திருந்தார். அவர் எனக்கு ஒரு கதை சொன்னார். தேவரீர் இப்போது கொடுத்த உத்தரவைக் கேட்டபோது எனக்கு அந்தக் கதை நினைப்புக்கு வருகிறது. அந்தக் கதையிலே, ஹூண தேசத்து வேந்தன் ஒருவன், தன் மந்திரியுடன் கடற்கரையிலே அலைமோதும் இடத்தில் சென்று நாற்காலிகள் போட்டு உட்கார்ந்துகொண்டு கடலை நோக்கி, "கடலே, நான் பூமண்டல சக்கரவர்த்தி; என் கட்டளைகளுக்கு நீயும் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும்; இதோ ஒரு கட்டளை யிடுகிறேன். முதலாவது அதன்படி நட. நாம் இருக்கும் இடத்தில் அலை எறியாதே; சற்றுப் பின்னே விலகிப் போ" என்றானாம். உடனே, தற்செயலாகக் கடலில் பிரமாண்டமானதோர் புதிய அலை வந்து அவ்விருவரின் நாற்காலியையும் மோதிக் கொண்டு போய்விட்டதாம். அவர்கள் உயிர் தப்புவது பெருங்கஷ்ட மாயிற்றாம். அந்த ஹூணராஜன் ஜடமான கடலுக்கு ஆக்கினை பிறப்பித்து வெட்கமடைந்தான். தாங்களோ, ஸூக்ஷ்ம சக்திகளுக்குள்ளே ஸப்தஸாகரங்களும் கலந்த சக்தியென்று சொல்லத்தக்கதாகிய மூல சக்தியை எதிர்த்துக் கட்டளைபோட உத்தேசிக்கிறீர்கள். ஆலைப் பலாவாக்கினாலும் ஆக்கலாம். மனிதருக்குள்ளே தலைமைப்பட்டோரிடம் வீண்கட்டளை பிறப்பிக்கும் இயல்பு நேராமற் செய்வது பெருங்கஷ்டம்.

*(அரண்மனைவாயிலில் கூ கூ என்று பல விதமான ஒலிகள் எழுகின்றன. நாலைந்து வேலையாட்கள் தலை அவிழ, மொழி குழற,*

*அரசன் முன்னே வந்து நிற்கின்றனர். ஒவ்வொருவனும் இன்னது சொல்வதென்று அறியாமல் திணறுகிறான்.)*

**சூரிய:** என்னேடா கிளர்ச்சி! எதன் பொருட்டு இத்தனை அல்லோலகல்லோலம்? யாது நிகழ்ந்தது? சொல்லுமின்களடா!

**முதல் வேலையாள்:** ஒரு குடம் ரத்தம்!

**இரண்டாம் வேலையாள்:** மண்டை கீறிப் போய்விட்டது......... மூக்கில் குத்தி.. வாய் கிழிந்திருக்கிறது!

**மூன்றாம் வேலையாள்:** பிரக்கினை போய் விட்டது!

**முதல் வேலையாள்:** பிரக்கினை திரும்ப வந்துவிட்டது! இளவரசன் இன்னும் சாகவில்லை.

**சூரிய:** என்னடா? யார், யார்? இளவரசனா? வஜ்ரியா? நடந்தது என்ன? அவனை யார் வெட்டினார்கள்? தெளிவாகச் சொல்.

**முதல் வேலையாள்:** காளிகோயில் யானை. அதற்கு மதம் ஏறி யிருக்கிறது. முன்பு இரண்டு கால்களுக்கு மாத்திரம் சங்கிலி போட்டுக் கட்டியிருந்தார்கள். இப்போது ஒரு வாரமாக நான்கு கால்களுக்கும் விலங்கிட்டிருக்கிறார்கள். அங்க தேசத்தரசன் மகனோடு, நம் இளவரசன் யானைக்குப் பழம் கொடுக்கப் போனார்.

**சூரிய:** கோயில் யானையா? என். மகனையா அடித்தது? நான் கெட்டேன் - ஆ! மகனே!

*(மூர்ச்சை போட்டு விழுந்துவிட்டான்.)*

**சாத்தன் :** கேளப்பா, ஏ வேலையாள்! இளவரசனைப்பற்றிப் பிறகு கவனிப்போம். முதலாவது இங்கு மூர்ச்சை போட்டு விழுந்திருக்கும் அரசனுக்கு வேண்டிய சிகிச்சைகள் செய்ய வேண்டும். இவரைத் தூக்குங்கள்; படுக்கை அறையிலே கொண்டு போடுங்கள். நான் குணப்படுத்தி விடுகிறேன்.

*(வேலையாட்கள் மூர்ச்சை போட்டு விழுந்த சூரியகோடியைத் தூக்கிக் கொண்டு செல்லுகின்றனர்.)*

# காட்சி 4

*(அரண்மனை. வஜ்ரியும், அங்கத்தரசன் மகன் சந்திரவர்மனும், வஜ்ரலேகையும் இருக்கின்றனர்.)*

**சந்திரவர்மன்:** எதற்கும் வஜ்ரி இப்போது அதிகமாக வார்த்தை சொல்லாமல் இருப்பது நன்று. யார் வந்தாலும் அவர்களுக்கு நானே மறுமொழிகள் சொல்லலாம் என்றும், வஜ்ரி வாய் திறந்தாலே கெடுதி என்றும், அரண்மனை வைத்தியர் பலமான எச்சரிக்கை கொடுத்துப் போனார். நடந்ததை நான் சொல்லுகிறேன்.

**வஜ்ரலேகை:** சரி, நீங்களே சொல்லுங்கள். முழு விவரமும் சொல்ல வேண்டும்.

**சந்திர:** அந்த யானைக்கு மதமேறியிருக்கிறதென்று எங்களிடம் யாரும் தெரிவிக்கவில்லை. நாங்கள் இருவரும் அங்கே போனபோது பாகன் இல்லை. புறத்து வேலியைச் சுற்றி நூற்றுக்கணக்கான ஜனங்கள் நின்றுகொண்டிருந்தனர். அந்த யானைக்குச் சமீபமாக வஜ்ரி நேரே சென்றான். நானும் வேலிப் புறத்தே நின்றேன். தொலைவிலிருந்து பார்த்தால் போதுமென்று நான் சொன்னேன். வஜ்ரி அது தனக்கு மிகப் பழக்கமென்றும், தன்னிடம் பூனைக்குட்டி போலே நடந்து கொள்ளும் என்றும் சொல்லி விட்டுச் சமீபத்திலே சென்றான்.

**வஜ்ர:** ஆம், நமது வஜ்ரியை வேலிப் புறத்தே கண்டால், நின்றுகொண்டிருக்கும் அந்த யானை கீழே படுத்துத் துதிக்கையைத் தூக்கி வணங்கிவிட்டு மறுபடி எழுந்து நிற்கும். நான் நேராகவே பன்முறை இதனைப் பார்த்திருக்கிறேன்.

**சந்திர:** ஆனால் இந்த முறை துரதிருஷ்ட வசத்தால் இவன் நேரே தன் முகத்தைக் காட்டாமல் தலையைக் குனிந்துகொண்டு யானையிடம் சென்றான். அப்படிக்கு அது அதிகமாக ஒன்றும் செய்யவில்லை. துதிக்கையால் இவனைத் தள்ளி வீழ்த்தி விட்டது. கீழே ஒருகல் மண்டையில் அடித்து ரத்தம் வெள்ளமாகப் பெருகிற்று. யானை அதைக் கண்ட மாத்திரத்தில் திடுக்கிட்டுப் போய் விட்டது. அப்போது நான் அந்த யானையின் முகத்தை உற்று நோக்கினேன்; ஓரிரு க்ஷணங்கள் தன் துதிக்கையால் வஜ்ரியின் கால்களைத் துழாவிக் கொண்டிருந்தது. இவன் பிரக்கினையின்றிக் கீழே அதன் முன்பு வீழ்ந்து கிடக்கிறான். ‘உம், உம்’ என்று ஒருவித உறுமுதல் இவன் வாயினின்றும்

வெளிப்பட்டுக்கொண்டிருந்தது. யானை, தன் தந்தையுடைய கடிகாரத்தை வீழ்த்தியுடைத்துவிட்டுப் பின் பச்சாதாபமெய்தும் குழந்தை விழிப்பது போலே விழித்துக் கொண்டு நின்றது. ஓரிரு க்ஷணங்களுக்கப்பால், நான் மனத்தைத் தைரியப்படுத்திக் கொண்டு வேலிக்குள் இறங்கி இவனை வெளியே தூக்கி வந்தேன். வெளியே கொண்டு வந்து நிறுத்திய அளவிலே இவனுக்குப் பிரக்கினை மீண்டுவிட்டது. இதுதான் நடந்த சங்கதி.

**வஜ்ர:** ரத்தச்சேதம் மிகவும் அதிகம் என்கிறார்களே!

**சந்திர:** ரத்தம் அதிகம் வடிந்து சென்றுவிட்டது எனினும் காயம் பெரிது அல்ல. உயிருக்கு அபாயம் இல்லை. காயம் சிறிதுதான். வைத்தியர் வந்து உதிரத்தைக் கழுவிக் கட்டுக் கட்டும்போது நான் நன்றாகப் பார்த்தேன். புண் சிறிது.

**வஜ்ரி:** கண்ணே, நீ அஞ்சாதே! நின்பொருட்டாக நான் பிழைப்பேன்.

*(இங்ஙனம் அவன் சொல்லுகையில் அவன் வாய் வழியாக ரத்தம் ஒழுகுதல் கண்டு வஜ்ரலேகை மூர்ச்சை போட்டு விடுகிறாள். அவளைத் தெளிவித்து எழுப்புதற்குரிய முயற்சிகளைச் சந்திரவர்மன் செய்கிறான். பிறகு அவளையும் ஒரு தோழியையும் பல்லக்கில் ஏற்றி வீட்டுக்கு அனுப்பிவிடுகிறார்கள்.)*

**சந்திரவர்மன்:** ஆ! காதலென்பதை இன்று தான் கண்டேன். வஜ்ரி, நீ அதிருஷ்டசாலி. உன்னை யானை அடித்ததுகூட எனக்குப் பொறாமை உண்டாக்குகிறது. என்னை ஒரு யானை அடித்து, எனக்காக ஒரு பெண் இப்படி மூர்ச்சை போட்டு விழுவதை நான் பார்க்க விரும்புகிறேன். ஸ்திரீகள் மூர்ச்சையுறுதல் புதுமை அல்ல. ஆனாலும் இவளுடைய மூர்ச்சை மாதிரிவேறு. இவளுடைய காதலே புதிது. ஆ! வஜ்ரி! நீ அதிருஷ்ட சாலிகளிலே சிறந்தவன். இனி என் தங்கையை நீ மணம் புரிந்து கொள்வதென்ற பேச்சை அடியோடு நிறுத்தி விடுவதற்குரிய ஏற்பாடுகள் நானே செய்கிறேன். உன் பிதாவுக்கும் நானே தெளிவேற்படுத்துகிறேன். நீ எதற்கும் யோசனை பண்ணாதே. இப்போது நீ இங்கே தனியாக இருப்பது நன்று. யாரிடமும் பேசாதே. வாய் திறக்கக்கூடாது. தூங்க முயற்சி பண்ணு. நான் போய் வருகிறேன்.

*(விடைபெற்றுச் செல்லுகிறான்.)*

## காட்சி 5

*(அமரபுரத்து அரசனாகிய சூரியகோடியின் சபை. மந்திரிகள் சேனாதிபதிகள் முதலியோர் புடைசூழ அரசன் வீற்றிருக்கிறான். அந்தச் சபையில் சத்தியராமன், வஜ்ரலேகை இருவரும் வந்திருக்கிறார்கள். வஜ்ரியும் தலை, வாய்களுக்குக் கட்டுகள் கட்டிக்கொண்டு வந்து வீற்றிருக்கிறான்.)*

**சூரியகோடி:** சபையோர்களே, குடிகளே! தசரதன் ஸ்ரீராமமூர்த்தியை மகனாகப் பெற்று மகிழ்ந்தான். நான் வஜ்ரியைப் பெற்றேன். இவன் ஆண்டிலே குறைந்தவனாயினும், அறிவிலும் வீரத்தன்மையிலும் இக்காலத்து ராஜகுமாரர்களுக்குள்ளே சிறந்து விளங்குகிறான். கல்வி கேள்விகளிலே இவன் நம் நாட்டுப் பண்டித சிகாமணிகளால் பெரிதும் வியக்கப்படுகிறான். இவன் பெரிய வேதாந்தி என்றும் ஆன்மஞானி என்றும் பல மேதாவிகள் தெரிவிக்கிறார்கள். இன்று காலையிலே இவன் ஏறக்குறைய இறந்துபட்டானென்ற செய்தி இந்த நகர் முழுதும் பரவிக் குடிகளனைவரையும் பெருந்துயரில் வீழ்த்திற்று. இன்று மாலை இவன் நேரே நமது சபைக்கு வந்து, தனக்கு லேசான உராய்தலையன்றி வேறொன்றும் இல்லை என்று சொல்லி நம்மிடையே பூர்ண சந்திரனைப்போல் வீற்றிருக்கிறான். இவனுக்கு நீங்கள் எல்லீரும் மனப் பூர்வமான ஆசீர்வாதங்கள் செய்தருள வேண்டும். இவனை வானவர் மார்க்கண்டன் போலே வாழ்விக்கக் கடவர். இன்று உங்களுக்கெல்லாம் நான் மிகவும் சந்தோஷமான செய்தி ஒன்று சொல்லப்போகிறேன். என் மகன் ஞானியாதலால் பல விஷயங்களில் சாதாரண லௌகிக வழக்கங்களை மீறி நடக்கிறான். அது எனக்குப் பல சமயங்களில் வருத்தம் உண்டாக்குகிறது. எனினும் என் செய்யலாம்? அவன் செய்வதுதான் நியாயமென்று பல முதியோர்களே சொல்லு கின்றனர். நாம் முற்கால விதிகளால் கட்டுப்பட்டிருக்கிறோம். அவன் எதிர்கால நிலை உணர்ந்தவனாகையால், எதிர்கால விதிகளின்படி நடக்கிறானென்று பண்டிதர்கள் சொல்லுகிறார்கள். திருஷ்டாந்தமாக, எங்கள் குலத்துக்குள்ள பொது வழக்கத்தின்படி இவனுக்கு ஒரு ராஜகுமாரியையே மணம் புரிவிக்க வேண்டு மென்று நான் நிச்சயித்திருந்தேன். இவனோ, நமது நகரத்து வைசியர்களில் மிகக் கீர்த்தி பெற்ற சத்தியராமச் செட்டியின் குமாரியையே மணம் புரிய உடம்படுகிறான். எதிர்கால உலகத்தில் காதல் ஒன்றையன்றி அசாசுவதமான பதவி வேற்றுமைகளைக் கருதி விவாக சம்பந்தங்கள் செய்து

கொள்ளப்படமாட்டாவாம். அதற்கு இவன் தானே ஒரு வழிகாட்டியாக நின்று, அமரபுரத்து அரண்மனையில் பட்ட மஹிஷியாக ஒரு வைசிய குமாரியைப் புகுத்த விரும்புகிறான். என் விருப்பத்தை மாற்றி நான் இவனுடைய கருத்துக்கு இணங்கி விட்டேன்.

அதனுடன், எனக்கு வயது முதிர்ந்துவிட்டபடியால், இவனுக்கு மகுடம் சூட்டிவிட்டு நான் மிஞ்சியுள்ள வாழ்க்கையை ராஜ்யப் பொறுப்புகளின்றி அமைதியுடன் கழிக்க நிச்சயித்திருக்கிறேன்.

மந்திரிகளே, குருக்களே, சேனாதிபதிகளே, நண்பர்களே!

என் மகன் வஜ்ரிக்கும் வஜ்ரலேகைக்கும் விவாகச் சடங்குகள் இந்த வாரத்துக்குள்ளே தொடங்கிவிடும். இனி உங்களுக்கு ராஜா வஜ்ரி, ராணி வஜ்ரலேகை. இந்திரனும் இந்திராணியும் போல் இவ்விருவரும் நீடூழி ஆட்சிபுரிய இந்நாடு மிகவும் கீர்த்தியும் சகல நன்மைகளும் பெற்று ஓங்குக!

(*வாத்திய கோஷம். வெடிகள் தீர்த்தல் முதலிய ஆரவாரங்கள்.*)

**கலைமகள், ஜனவரி, 1951 பக். 83-90**

கட்டுரை

# சிட்டுக்குருவி!

சிறிய தானியம் போன்ற மூக்கு; சின்னக் கண்கள்; சின்னத் தலை; வெள்ளைக் கழுத்து ; அழகிய மங்கல் வெண்மை நிறமுடைய பட்டுப் போர்த்த வயிறு; கருமையும் - வெண்மையும் இடை கலந்த சாம்பல் நிறத்தாலாகிய பட்டிறகு போர்த்த முதுகு; சிறிய தோகை; துளித் துளிக் கால்கள்.

இத்தனையையும் சேர்த்து ஒரு பச்சைக் குழந்தையின் கைப்பிடியிலே பிடித்து விடலாம். இவ்விதமான உடலைச் சுமந்து கொண்டு என் வீட்டிலே இரண்டு உயிர்கள் வாழ்கின்றன. அவற்றில் ஒன்று ஆண். மற்றொன்று பெண். இவை தம்முள்ளே பேசிக் கொள்ளுகின்றன. குடும்பத்துக்கு வேண்டிய உணவு தேடிக் கொள்ளுகின்றன. கூடு கட்டிக் கொண்டு, கொஞ்சிக் குலாவி மிக இன்பத்துடன் வாழ்ந்து, முட்டையிட்டுக் குஞ்சுகளைப் பசியில்லாமல் காப்பாற்றுகின்றன.

சிட்டுக்குருவி பறந்து செல்வதைப் பார்த்து எனக்கு அடிக்கடி பொறாமை யுண்டாகும். ஆஹா! உடலை எவ்வளவு லாகவத்துடன் சுமந்து செல்லுகிறது. இந்தக் குருவிக்கு எப்போதேனும் தலை நோவு வருவதுண்டா? ஏது, எனக்குத் தோன்றவில்லை. ஒரு முறையேனும் தலை நோவை அனுபவித்த முகத்திலே இத்தனை தெளிவிருக்க நியாயமில்லை. பயமும் மரணமும் மனிதனுக்குள்ளது போலவே குருவிக்கும் உண்டு. இருந்த போதிலும் க்ஷணந்தோறும், மனிதனுடைய நெஞ்சைச் செல்லரிப்பதுபோலே அரிக்கும் கவலைத் தொகுதியும் அதனால் ஏற்படும் நோய்த்திரளும் குருவிக்கு இருப்பதாகத் தெரியவில்லை.

தெய்வமே, எனக்கு இரண்டு சிறகுகள் கொடுக்க மாட்டாயா? பாழ்பட்ட மனிதர் கூட்டத்தையும் இதன் கட்டுக்களையும் நோய்களையும் துன்பங்களையும் பொய்களையும் உதறி எறிந்துவிட்டு நான் இச்சைப்படி வானத்திலே பறந்து செல்ல மாட்டேனா? ஆஹா! எத்தனை தேசங்கள் பார்க்கலாம்! எத்தனை காடுகள்! எத்தனை பூக்கள்! எத்தனை மலைகள்! எத்தனை சுனைகள்! எத்தனை அருவிகள்! எத்தனை நதிகள்! எத்தனை கடல் வெளிகள்! வெயில், மழை ,காற்று, பனி - இவையெல்லாம் என் உடம்புக்கு நன்றாக வழக்கப்பட்டு இவற்றால் நோய் உண்டாகாமல் எப்போதும் இன்ப உணர்ச்சிகளே உண்டாகும். இந்த நிலை எனக்கு அருள் புரியலாகாதா?

குருவிக்குப் பேசத்தெரியும்; பொய் சொல்லத் தெரியாது. குருவியில் ஆண் - பெண் உண்டு; தீராத கொடுமைகள் இல்லை. குருவிக்கு வீடுண்டு; தீர்வை கிடையாது. குருவிக்கு உணவுண்டு; உழைப்புண்டு. நாயகனில்லை; சேவகமில்லை.

தெய்வமே, எனக்கு இவ்விதமான வாழ்க்கை தரலாகாதா? குருவிக்கில்லாத பெருமைகள் எனக்கும் சில அருள் செய்திருக்கிறாயென்பது மெய்தான். ஆராய்ச்சி பக்தி ஸங்கீதம் கவிதை முதலிய இன்பங்கள் மனிதனுக்குக் கைகூடும்; குருவிக்கு இயல்பில்லை.

ஆனாலும் இந்த இரண்டு வித இயல்பும் கலந்து பெற்றால் நான் பரிபூரண இன்பத்தை அடைய மாட்டேனா?

இந்தக் குருவி என்ன சொல்லுகிறது?

"விடு", "விடு", "விடு" என்று கத்துகிறது.

இஃது நான் விரும்பிய இன்பத்துக்கு வழியின்னதென்று தெய்வம் குருவித் தமிழிலே எனக்குக் கற்றுக் கொடுப்பது போலிருக்கிறது.

விடு, விடு, விடு - தொழிலை விடாதே. உணவை விடாதே. பேட்டை விடாதே. கூட்டை விடாதே. குஞ்சை விடாதே.

உள்ளக் கட்டை அவிழ்த்துவிடு. வீண் யோசனையை விடு. துன்பத்தை விடு.

இந்த வழி சொல்லுவதற்கு எளிதாயிருக்கிறது. இதனை நன்றாக உணர்ந்து கொள்ளுதல் எளிதன்று. உணர்ந்த பின்னும், இதை வழக்கப்படுத்துதல் அருமையிலும் அருமையிலும் அருமை.

"விடு" என்ற பகுதியிலிருந்து "வீடு" என்ற சொல் வந்தது. வீடு என்பது விடுதலை. இதை வடமொழியிலே முக்தி என்கிறார்கள். இந்த நிலைமையை இறந்து போனதன் பின்பு பெறவேண்டுமென்று பெரும்பாலோர் விரும்புகிறார்கள். இவ் வுலக வாழ்க்கையிலேயே, இப்போதே இந்நிலையை விரும்புதல் நன்று.

விடுதலையே இன்பத்திற்கு வழி; விடுதலை பெற்றோர் வறுமையிலிருந்து மாறிச் செல்வமடைவார்கள். மெலிவும் நோயும் நீங்கி வலிமையும் உறுதியும் பெறுவார்கள். சிறுமை நீங்கிப் பெருமை காண்பார்கள். துன்பங்கள் நீங்கி இன்ப மெய்துவார்கள்.

வா; நெஞ்சே, பராசக்தியை நோக்கிச் சில மந்திரங்கள் சாதிப்போம்:

நான் விடுதலை பெறுவேன் ; எனது கட்டுகள் அறுபடும்.

நான் விடுதலை பெறுவேன் ; என்னிச்சைப்படியே எப்போதும் நடப்பேன். என் இச்சையினாலே பிறருக்குத் தீங்கு விளையாது. எனக்கும் துன்பம் விளையாது. நன்மைகளே என்னுடைய இச்சைகள். இவற்றை நான் எப்போதும் நிறைவேற்றும்படியாக க்ஷணந்தோறும் எனக்கு ப்ராண சக்தி வளர்ந்து கொண்டு வருக.

உயிர் வேண்டுகிறேன்; தலையிலே இடி விழுந்த போதிலும் சேதப்படாத வயிர உயிர். கையினாலே புடைத்துக் கல்லை நொறுக்கக் கூடிய வல்லுயிர். உடலை எளிதாகவும், உறுதி யுடையதாகவும், நேர்மை யுடையதாகவும் செய்து காக்கின்ற உயிர்.

அறிவு வேண்டுகிறேன்: எந்தப் பொருளை நோக்குமிடத்தும், அதன் உண்மைகளை உடனே தெளிந்து கொள்ளும் நல்லறிவு; எங்கும், எப்போதும் அச்சமில்லாத வலிய அறிவு.

பிற வுயிருக்குத் தீங்கு தேடமாட்டேன்; என்னுயிருக்கு எங்கிருந்தும் தீங்கு வரமாட்டாது.

பராசக்தி, நின்னருளால் நான் விடுதலை பெற்று இவ்வுலகத்தில் வாழ்வேன்.

**கால வரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள் தொகுதி-8**

கடிதம்

# பரலி சு. நெல்லையப்பருக்கு எழுதிய கடிதம்

ஓம்

புதுச்சேரி
19 ஜூலை 1915

எனதருமைத் தம்பியாகிய ஸ்ரீ நெல்லையப்ப பிள்ளையைப் பராசக்தி நன்கு காத்திடுக.

தம்பி – மாதத்துக்கு மாதம் நாளுக்கு நாள் நினதறிவு மலர்ச்சி பெற்று வருவதைக் காண்கிறேன். நினது உள்ளக் கமலத்திலே பேரறிவாகிய உள் ஞாயிற்றின் கதிர்கள் விரைவிலே தாக்கி நினக்கு நல்லின்பம் உண்டாகுமென்றே கருதுகிறேன்.

●

நெஞ்சம் இளகி விரிவெய்த விரிவெய்த அறிவிலே சுடர் ஏறுகிறது. நம்மிலும் மெலியாருக்கு நாம் இரங்கி அவர்களை நமக்கு நிகராகச் செய்துவிடவேண்டுமென்று பாடுபடுதலே நாம் வலிமை பெறுவதற்கு வழியாகும். வேறு வழியில்லை.

●

ஹா! உனக்கு ஹிந்தி, மராட்டி முதலிய வடநாட்டு பாஷைகள் தெரிந்திருந்து, அந்த பாஷைப் பத்திரிகைகள் என்ன அற்புதமான புதுமை பெற்றுள்ளன என்பதை நேரிடத் தெரிந்து கொள்ள முடியுமானால் – தமிழ் நாட்டிற்கு எத்தனை நன்மையுண்டாகும்; தமிழ், தமிழ், தமிழ் – என்று எப்போதும் தமிழை வளர்ப்பதே கடமையாகக் கொள்க. ஆனால் புதிய செய்தி, புதிய, புதிய யோசனை, புதிய, புதிய உண்மை, புதிய, புதிய இன்பம் – தமிழில் ஏறிக்கொண்டே போக வேண்டும்.

●

தம்பி - நான் ஏது செய்வேனடா!

தமிழைவிட மற்றொரு பாஷை சுகமாக இருப்பதைப் பார்க்கும் போது எனக்கு வருத்தமுண்டாகிறது. தமிழனைவிட மற்றொரு ஜாதியான் அறிவிலும் வலிமையிலும் உயர்ந்திருப்பது எனக்கு ஸம்மதமில்லை. தமிழச்சியைக் காட்டிலும் மற்றொரு ஜாதிக்காரி அழகாயிருப்பதைக் கண்டால் என் மனம் புண்படுகிறது.

தம்பி - உள்ளமே உலகம்.

ஏறு! ஏறு! ஏறு! மேலே, மேலே, மேலே!

நிற்கும் நிலையிலிருந்து கீழே விழாதபடி கயிறுகள் கட்டி வைத்துக்கொண்டு பிழைக்க முயற்சி பண்ணும் பழங்காலத்து மூடர்களைக் கண்டு குடல் குலுங்கச் சிரி.

உனக்குச் சிறகுகள் தோன்றுக. பறந்து போ.

பற! பற! மேலே, மேலே, மேலே.



தம்பி - தமிழ்நாடு வாழ்க என்றெழுது.

தமிழ்நாட்டில் நோய்கள் தீர்க என்றெழுது

தமிழ்நாட்டில் வீதிதோறும் தமிழ்ப்பள்ளிக்கூடங்கள் மலிக என்றெழுது.

அந்தத் தமிழ்ப் பள்ளிக்கூடங்களிலே நவீன - கலைகளெல்லாம் பயிற்சி பெற்று வளர்க என்று எழுது.

தமிழ்நாட்டில் ஒரே ஜாதிதான் உண்டு. அதன் பெயர் தமிழ் ஜாதி. அது ஆர்ய ஜாதி என்ற குடும்பத்திலே தலைக்குழந்தை என்றெழுது.

ஆணும் பெண்ணும் -ஒருயிரின் இரண்டு கலைகள் என்றெழுது.

அவை ஒன்றிலொன்று தாழ்வில்லை என்றெழுது.

பெண்ணைத் தாழ்மை செய்தோன் கண்ணைக் குத்திக் கொண்டான் என்றெழுது.

பெண்ணை அடைத்தவன் கண்ணை அடைத்தான் என்றெழுது.

தொழில்கள், தொழில்கள் என்று கூவு.

தப்பாக வேதம் சொல்பவனைக் காட்டிலும் நன்றாகச் சிரைப்பவன் மேற்குலத்தான் என்று கூவு.

வியாபாரம் வளர்க; யந்திரங்கள் பெருகுக.

முயற்சிகள் ஓங்குக. ஸங்கீதம், சிற்பம், யந்திரநூல், பூமி நூல், வானநூல், இயற்கை நூலின் ஆயிரம் கிளைகள் இவை தமிழ் நாட்டிலே மலிந்திடுக என்று முழங்கு.

சக்தி சக்தீ சக்தீ என்று பாடு.

தம்பி – நீ வாழ்க.



உனது கடிதம் கிடைத்தது. குழந்தைக்கு உடம்பு செம்மையில்லாமல் இருந்தபடியால் உடனே "ஜவாப்" எழுத முடியவில்லை. குழந்தை புதிய உயிர் கொண்டது. இன்று உன் விலாஸத்துக்கு 'நாட்டுப் பாட்டுக்கள்' அனுப்புகிறேன். அவற்றைப் பகுதி பகுதியாக உனது பத்திரிகையிலும் ஞானபாநுவிலும் ப்ரசுரம் செய்வித்திடுக. 'புதுமைப் பெண்' என்றொரு பாட்டு அனுப்புகிறேன். அதைத் தவறாமல் உடனே அச்சிட்டு அதன் கருத்தை விளக்கி எழுதுக. எங்கேனும், எப்படியேனும் பணம் கண்டுபிடித்து ஒரு நண்பன் பெயரால் நமக்கனுப்புக. தம்பி உனக்கேனடா இது கடமையென்று தோன்ற வில்லை? நீ வாழ்க.

உனதன்புள்ள
**பாரதி**

நூல் மதிப்புரை

# TWO REMARKABLE BOOKS
# இரண்டு முக்கியமான புஸ்தகங்கள்

தமிழ்ப் புஸ்தகங்கள் இப்போது சிறிது காலமாக மிகவும் ஜாஸ்தியாகப் பிரசுரமுறத் தொடங்கி விட்டன.

அச்சியந்திரங் கண்டுபிடித்திருப்பதால் எத்தனையோ வித அனுகூலங்களிருந்த போதிலும், சிற்சில தீமைகளில்லாமற் போக வில்லை.

அவற்றிலே முக்கியமான தீமை யாதெனில், படித்தற்குத் தகுதியுடைய சிலவும், இல்லாதன பலவுமாக நூற்றுக்கணக்கான புஸ்தகங்கள் "பூப்பிளக்க வெளியில் வரும் புற்றீசல் போலப் புலபுலெனக் கலகலென" வெளியேறுகின்றன.

அச்சியந்திரங்கள் மிகவும் வரம்பற்றுப் போய்க் கிடக்கும் இங்கிலந்து முதலிய தேசங்களிலே இருப்பதுபோல நமது தேசத்தில் மேற்படி கஷ்டம் அத்தனை அதிகமாக இல்லை யென்றாலும் இங்குகூட அது நாளுக்கு நாள் மிகுதிப்பட்டு வருகின்றது.

இப்படிப்பட்ட காலத்தில் படித்தற்கினிய, நல்ல, பயனுடைய புத்தகங்கள் அச்சிட்டு வருவதைக் காணும்போது மனதுக்கு மிகுந்த ஆறுதலேற்படுகின்றது.

கீழே கூறப்படும் இரண்டு புத்தகங்களையும் நமது நேயர்களின் கவனத்துக்கு மிகுந்த களிப்புடன் கொண்டு வருகின்றோம்.

### சிவஞான பாஷ்யம்

இப் புத்தகத்தை நாம் மிகுந்த ஆவலுடன் படித்தோம். மதுரை 'விவேகபாநு' ஆபீஸிலிருந்து நமக்கு அனுப்பப்பட்டது.

தமிழிலே நல்ல பழக்கமுடைய எல்லோரும் நெடுங்காலமாக 'இது எப்போது வெளியாகுமோ'வென்று, யூத ஜாதியார் மேசையாவின் வரவுக்குக் காத்திருப்பது போலக் காத்துக் கொண்டிருந்தார்கள்.

தமிழ்ப் பாஷையிலே மிகுந்த பயிற்சியில்லாத நாம்கூட இளமை முதலாக "ஐயோ, சிவஞான முனிவர் செய்திருப்பதாகச் சொல்லப்படும் திராவிட மஹா பாஷியம் என்ற அரிய நூலைத் திருவாவடுதுறை ஆதீனத்தார் உலகமறியாமல் மூடி வைத்திருக்கின்றார்களாமே? அது

எத்தனை அருமையுடையதாயிருக்குமோ? எப்போதுதான் வெளி வருமோ?" என்று பலமுறை பெருமூச்செறிந்திருக்கின்றோம்.

இப்போது இந்த அருமையான நூலை மிகவும் குறைந்த விலையிலே அச்சிட்டனுப்பியதின் பொருட்டு 'விவேகபாநு' ஆபீஸருக்கு மிகவும் நன்றி செலுத்துகின்றோம்.

இந்த நூல் நாம் எதிர்பார்த்திருந்ததற்குச் சிறிதேனும் பெருமையிலே குறைவுபடாது விளங்குகின்றது. இதில் இன்னும் சில பகுதிகள் பிரசுரித்தோருக்குக் கிடையாமல் போய்விட்டமை பற்றி விசனமுறுகின்றோம்.

இந்நூலின் விஷயங்கள் சைவ சித்தாந்த மார்க்க சம்பந்தமானதால் அவற்றைப் பற்றி நெடுமையாக விவகரிப்பது பொது ஜனங்களுக்கு ஒருவேளை விரஸமா யிருக்கலா மென்று அஞ்சி, அங்ஙனம் செய்யாது விடுகின்றோம்.

எனினும், சைவ சித்தாந்திகள் முதலிய எல்லா வகுப்பினருள்ளும், தமிழறிவுள்ள அனைவரும் அதை ஆவலுடன் ஆதரவு செய்வார்க ளென்று நாம் உறுதியாக நம்புகின்றோம்.

## வருண சிந்தாமணி

இது சென்னை வீரப்பப் பிள்ளைத் தெரு கவர்ன்மெண்ட் பென்ஷனர் ஸ்ரீ கனகசபைப் பிள்ளையால் இயற்றப்பட்டது.

வருணாசிரம தர்மங்களைப் பற்றிப் பொதுப்படையாகவும், விசேஷமாக வேளாளர்களின் வர்ணம், ஆசாரம், அனுஷ்டானம் முதலியவற்றைப் பற்றியும் இது மிகவும் விரிவாக விவகரிக்கின்றது.

இதன் ஆசிரியர் சம்ஸ்கிருத பாஷையிலும், ஆங்கிலேய பாஷையிலும், தமிழிலும் அனேக நூல்களிலும் பயிற்சியுடையோ ரென்பது இந்நூலிலே ஒவ்வொரு பக்கத்திலும் இனிது நிதரிசன முறுகின்றது.

தமிழர்க ளெல்லோரும் இதில் மிக அன்பு செலுத்தி வருகிறார்க ளென்பதற்கு இந்நூல் இத்தனை சீக்கிரம் முதற் பதிப்புப் பிரதிகளெல்லாம் செலவாகி இரண்டாம் பதிப்புக்கு வந்தமையே தக்க சான்றாகிறது.

(விசுவநாதம் - என்னும் தமிழ் நாடக மொன்று நமது பார்வைக்கு வந்திருக்கின்றது. இதைப் பற்றி மற்றொரு முறை எழுதுவோம்.)

**கால வரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள் தொகுதி-2**

மொழிபெயர்ப்பு (கவிதை)

# கற்பனை யூர்

கற்பனையூ ரென்ற நகருண்டாம் - அங்கு
கந்தர் வர்விளை யாடுவராம்.
சொப்பன நாடென்ற சுடர்நாடு - அங்கு
சூழ்ந்தவர் யாவர்க்கும் பேருவகை!

திருமணையிது கொள்ளைப் போர்க்கப்பல் - இது
ஸ்பானியக் கடலில் யாத்திரைபோம்;
வெருவுற மாய்வார் பலர்கடலில் - நாம்
மீளவுநம்மூர் திரும்பு முன்னே!

அந்நகர் தனிலோ ரிளவரசன் - நம்மை
அன்பொடு கண்டுரை செய்திடுவான்
மன்னவன் முத்தமிட் டெழுப்பிடவே - அவன்
மனைவியு மெழுந்தங்கு வந்திடுவாள்.

எக்கால மும்பெரு மகிழ்ச்சியங்கே
எவ்வகைக் கவலையும் போருமில்லை;
பக்குவத் தேயிலை நீர்குடிப்போம் - அங்கு
பதுமைகைக் கிண்ணத்தி லளித்திடவே

இன்னமு திற்கது நேராகும் - நம்மை
யோவான் விடுவிக்க வருமளவும்,
நன்னக ரதனிடை வாழ்ந்திடுவோம் - நம்மை
நலித்திடும் பேயங்கு வாராதே.

குழந்தைகள் வாழ்ந்திடும் பட்டணங்காண் - அங்கு
கோல்பந்து யாவிற்கு முயிருண்டாம்
அழகிய பொன்முடி யரசிகளாம் - அன்றி
அரசிளங் குமரிகள் பொம்மையெலாம்

செந்தோ லசுரனைக் கொன்றிடவே - அங்கு
சிறுவிற கெல்லாம் சுடர்மணிவாள்
ஸந்தோ ஷத்துடன் செங்கலையும் - அட்டைத்
தாளையுங் கொண்டங்கு மனைகட்டுவோம்

கள்ளரவ் வீட்டினுட் புகுந்திடவே - வழி
காண்பதி லாவகை செய்திடுவோம் - ஓ!
பிள்ளைப் பிராயத்தை இழந்தீரே! - நீர்
பின்னுமந் நிலைபெற வேண்டீரோ?

குழந்தைக ளாட்டத்தின் கனவையெல்லாம் - அந்தக்
கோலநன் னாட்டிடைக் காண்பீரே!
இழந்தநல் லின்பங்கள் மீட்குறலாம் - நீர்
ஏகுதிர் கற்பனை நகரினுக்கே

* 'ஜான் ஸ்கர்' என்ற ஆங்கிலப் புலவர்
'நக்ஷத்ர தூதன்' (The Herald of the Star)
என்ற பத்திரிகையில் பிரசுரித்த
'The Town of Let's Pretend'
என்ற பாட்டின் மொழிபெயர்ப்பு

## மொழிபெயர்ப்பின் மூல வடிவம்

Now this is the town of 'Let's Pretend'
Where the fairies live and play;
'Tis the gorgeous land of 'Make Believe'
Where everyone is gay.

This chair has become a pirate ship
That sails the Spanish Main –
Full many a man must walk the plank
Ere we come home again.

'Tis here the prince will welcome us
With the kiss that awoke his wife;
For happy they are, for ever and aye,
Free from all care and strife

We'll drink our tea from dolly's cup,
Sweet nectar it will be.
We must hide away from the giant ogre
Till Jack Can set us free

The children dwell in this pleasant town
Where the toys all pulse with life;
Each doll is a queen in a golden crown
Or elses a prince's wife.

Each firewood stick is a dagger ornate
To destroy the Red Skin chief
And with cards or bricks we build a house
Which never shall shelter a thief

O would that we of the elder breed
Whose youth has passed away
Could dream again as we dreamt of yore
As the children dream at their play

But the dear sweet land of 'Make Believe'
We never can enter again;
We have grown too old and cannot pretend
Nor castle build in Spain.

கால வரிசையில் பாரதி பாடல்கள், பக்.998, 999

# விக்தோர் ஹ்யூகோ என்ற பிரஞ்ச் ஞானியின் வசனங்கள்

## தெய்வம் எப்படிப் பேசுகிறது

உலகத்திலே நடைபெறும் செய்திகளை யெல்லாம் கூர்ந்து பார்க்கவேண்டும். அப்போதுதான் தெய்வத்தின் பாஷை விளங்கும். அதன் ஆணைகள் தெளிவுபடும்.

ஆனால், இது ரஹஸ்ய பாஷை; எளிதாக அர்த்தமாகாது. சாதாரண மனிதர் இந்தப் பாஷையை மொழிபெயர்க்கத் தொடங்கினால், அதிலே பிழை போடுகிறார்கள்; அவஸரப்படுகிறார்கள். முன்பின் முரணு கிறார்கள்; இடையிடையே சில அமிசங்களை விட்டுவிடுகிறார்கள்.

அறிவுடையோர், பொறுமையுடையோர், ஆழ்ந்து சிந்தனை செய்வோர் - இவர்கள் பரபரப்புக் கொள்வதில்லை. காத்திருந்து காத்திருந்து, மெல்ல மெல்ல மொழிபெயர்த்துப் பார்க்கிறார்கள். இவர்களுடைய மொழிபெயர்ப்பிலே உண்மை அகப்படுகின்றது.

## ஸமத்துவம் என்பது யாது?

ஸமத்துவக் கொள்கையிலே இரண்டு செய்திகளைப் பற்றிய விசாரணை யுண்டாகிறது. முதலாவது, செல்வத்தை உண்டாக்குதல்; இரண்டாவது, அதைப் பங்கிட்டுக் கொடுத்தல். முதலாவது செய்தியில் தொழிலைப் பற்றிய ஆராய்ச்சி ஏற்படுகிறது. இரண்டாவது செய்தியில் கூலியைப்பற்றிய பேச்சு.

முதல் விஷயம் திறமைகளின் உபயோகத்தைப் பற்றியது.

இரண்டாம் விஷயம் இன்பங்களைப் பங்கிட்டுக் கொடுப்பதைப் பற்றியது.

திறமைகளை உபயோகப்படுத்துவதனாலே ஜனவலிமை உண்டாகிறது.

சுகங்களை நேரே வகுத்தால் ஒவ்வொருவனுக்கும் சுகமுண்டாகிறது.

நேரே வகுத்தல் என்றால் ஒன்றுபோலே வகுத்தல் என்று அர்த்தமில்லை. நியாயமாக வகுத்தல் என்று அர்த்தம். நியாயமே ஸமத்துவத்தின் பேர். நியாயந்தான் முதலாவது ஸமத்துவம்.

மேலே கூறிய ஜனவலிமை, ஸர்வசுகம் - என்ற இரண்டும் சேர்ந்தால் ஜனச் செம்மை ஏற்படுகிறது.

ஜனச் செம்மை எப்படி யிருக்கும்?

மனிதன் செல்வனாவான். குடிகள் விடுதலை பெற்றிருப்பர். நாடு உயர்வு பெற்றிருக்கும்.

## காதல்

உலகம் இறுகி ஒரு பொருளாய் நிற்பது; ஒரே பொருள் தெய்வம் வரை விரிந்து நிற்பது; இதுவே காதல்.

காதலர் பிரிந்திருக்கும்போது அவர்களை ஒருவருக்கொருவர் ஓலை எழுதலாகாதென்று தடுத்தால், அவர்கள், நமக்குத் தெரியாதபடி, ஆயிரம் ஆச்சரிய வழிகள் கண்டுபிடித்துப் பேசிக் கொள்ளுகிறார்கள். பறவைகளின் பாட்டையும் மலர்களின் மணத்தையும், குழந்தைகளின் சிரிப்பையும், ஞாயிற்றின் ஒளியையும், காற்றின் உயிர்ப்பையும், வானத்து மீன்களின் கதிர்களையும் காதலர் தூது விடுகிறார்கள். ஏன் கூடாது? தெய்வத்தின் படைப்பு முழுதும் காதலுக்குத் தொண்டு செய்யும் பொருட்டாகவே அமைந்திருக்கிறது. உலக முழுதையும் தூதுபோகச் செய்கிற திறமை காதலுக்குண்டு.

ஏ இளவேனிற் காலமே, நான் அவளுக்கு எழுதுகிற ஓலை நீ.

உயிரே, நீ கல்லாகப் பிறந்தால், காந்தக் கல்லாய்ப் பிற; செடியானால், தொட்டால் வாடி என்ற செடியாகிவிடு. மனிதனானால், காதல் செய்.

காதலர் இல்லாவிடின், ஞாயிறு என்பதோர் தீப்பந்து அவிந்து போய்விடும்.

**கால வரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள்-8**

சொற்பொழிவு

# இந்தியாவின் முற்காலப் பெருமையும் தற்கால நிலைமையும்

**(மணலி குலோத்துங்கன் வாசகசாலையில் ஆற்றிய பொழிவின் பதிவு)**

மணலி யென்பது திருத்துறைப்பூண்டிக் கருகிலுள்ள ஒரு அழகிய கிராமம். அங்கு ஒரு ஆரம்பப் பாடசாலையும் அதனைச் சார்ந்து குலோத்துங்கன் வாசக சாலையென்ற படிப்பறையும் இருக்கின்றன. அந்த வாசகசாலையின் முதல் ஆண்டு நிறைவு டிஸம்பர் 13ஆந் தேதி திங்கட்கிழமை பிற்பகல் மூன்று மணி முதல் இரவு 10 மணி வரை கொண்டாடப்பட்டது. இடையிடையே வந்திருந்த கூட்டத்தார் அனைவருக்கும் சிற்றுண்டிகளும் இரவில் பலருக்கு போஜனமும் நேர்த்தியாகத் தயார் செய்யப்பட்டிருந்தன.

நெடும்பலம் மிராஸ்தார் ஸ்ரீமான் ஸாமியப்ப முதலியார் அக்ராஸனம் வஹித்தார். அக்ராஸனபதியும், சென்னையிலிருந்து மேற்படி திருவிழாவுக்கென்று விசேஷமாக அழைக்கப்பட்டிருந்தவர் களாகிய ஸ்ரீமான் ஸத்தியமூர்த்தி அய்யரும், ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதியும் பந்தருக்குட் புகும்போது இனிய நாகஸ்வரம் ஒலித்தது.

ஸபையாரின் அறிக்கை வாசிக்கப்பட்டது. பண மிச்சம் அதிகமில்லை. எனினும், ஸபைக்குப் பணத் தட்டில்லை. தகுந்த மனிதர் போஷகராய் விட்டனர். அக்ராஸனபதி ஸ்ரீமான் ஸாமியப்ப முதலியார் இந்த ஸபையில் முக்ய போஷகரில் ஒருவரென்பதும் குறிப்பிடத்தக்கது. பொதுவாக, ஸபையின் நிலைமை வளர்முகமாகத் தானிருக்கிறது.

### உபந்யாஸங்கள்

அக்ராஸனபதி ஆரம்ப உபந்யாஸம் புரிந்து ஸபையோருக்குச் சென்னை நண்பர்களை அறிமுகப்படுத்தினார். பல தாலுக்கா விஷயங்களைக் குறித்துப் பேசினார். பிறகு ஸ்ரீமான் சத்தியமூர்த்தி ஐயர் பேசியதில் சில அம்சங்கள் கீழே தரப்படுகின்றன.

"ஒத்துழையாமைக் கொள்கை நியாயந்தான். ஆனால் ஸ்ரீமான் காந்தியின் திட்டத்தில் சில அம்சங்கள் ஸாத்யப்படுவன அல்ல. விரும்பத் தக்கன அல்ல; அவசியமல்ல. தீர்வையை நிறுத்தி விடுதல்; ஸர்க்கார் உத்தியோகங்களை விடுதல், இவை இயலுமாயின் இவற்றால் அன்னிய ராஜாங்கத்தை ஸ்தம்பிக்கச் செய்யலாம். காந்தி மார்க்கத்தில் அந்த ஸ்தம்பனம் நடக்காது. (தாம் உயிருள்ள வரை, ஸ்வராஜ்யம் கிடைக்கும்

வரை, வேறெந்தப் பேச்சும் தம்மால் பேச இயலாதென்றார்.) ஒற்றுமை இருந்தால் ஸ்வராஜ்யம் பெறுதல் எளிது. எனவே நமக்குள்ளேயே பிராமணரென்றும் அல்லாதாரென்றும் கக்ஷி பேதங்களை எழுப்புதல் தேசத் துரோகிகளின் செய்கை; அநாவசியமானது; நிஷ்காரணமானது; ராஜரீக விஷயங்களில் சிறிதேனும் செல்லுபடி இல்லாதது; ஆதலால் பரம மூடத்தன்மை பொருந்தியது. எனவே எல்லாக் கக்ஷியாரும் சில்லரை மன வேற்றுமைகளைத் துறந்து ஸ்வராஜ்யத்துக்குப் பாடுபடுதல் கடமை என்றார். இரண்டு மணி நேரம் ஸபையோர் வியக்கும்படி பேசினார்.

பிறகு ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதியைக் குறித்துத் திருவாரூர் ஸ்ரீமான் ஞானியார் (கமலாஸனி - பத்திராதிபர்) சில விஷயங்கள் தெரிவித்தார்.

அப்பால் ஸ்ரீமான் - பாரதி "இந்தப் பாருக்குள்ளே நல்ல நாடு, எங்கள் பாரத நாடு (தோடி)", "ஜயமுண்டு (கமாஸ்)" என்ற கீதங்கள் பாடினார். "இந்தியாவின் முற்காலப் பெருமையும் தற்கால நிலைமையும்" என்ற மகுடத்தின் கீழே, ஸ்ரீமான் பாரதி பேசியதன் சுருக்கம்:- "இந்தியாவின் சரித்திரம் ஐந்து பகுதி: (1) வேத இந்தியா (2) பௌத்த இந்தியா (3) ஹிந்து இந்தியா (4) மஹமதிய இந்தியா (5) ஐரோப்பிய இந்தியா என. இவற்றுள் ஐரோப்பிய இந்தியா சில விஷயங்களில் குற்றமில்லை. பல விஷயங்களில் குற்றமுடையது. இக் குற்றங்கள் நீங்கி இந்திய இந்தியா ஆறாவதாகத் தோன்றி, உலகத்தில் தர்மத்தை ஸ்தாபிக்க வேண்டும். இந்தியாவில் நியாயம் ஏற்பட்டால்தான் உலகத்தில் நியாயம் ஏற்படும். ராஜரீக வேற்றுமைகள், ஜாதி வேற்றுமைகள், வர்ண வேற்றுமை, பால் வேற்றுமை, ஜந்து வேற்றுமை (மாம்ஸ பக்ஷணம்) முதலிய எல்லா விதமான பாரபக்ஷங்களிலும் முடிவான, நியாயம் இந்தியாவில் தீர்மானிக்கப் பட்டாலன்றி உலகத்தில் நியாயம் ஏற்படாது. இந்தியா பூமிக்கு முத்திரை நாடு. இது கரு நாடு. இது மனுஷ்ய நாகரிகத்துக்குத் தாய் நாடு. மனுஷ்ய அறிவுக் கெட்டக் கூடிய உண்மைகளனைத்திலும் மகாஸூக்ஷ்மமானதும், ஐரோப்பிய ஸயன்ஸ் இன்று, மிக சிரமத்துடன், தீண்ட முயன்று, தட்டித் தடுமாறிக் கொண்டிருக்கும் கரைக்கப்பாலுள்ள அறிவுக் கடலென்று புகழத் தக்கதுமான உண்மையை, ஐரோப்பிய நாகரிகங்கள் தோன்றுவதற்கு எத்தனையோ பதிற்றுப் பல நூற்றாண்டுகளின் முன்னே, வஸிஷ்டன், வாமதேவன், விசுவாமித்திரன் முதலிய வேத ரிஷிகள் கண்டு முடித்திருந்தனர். அவ் வேதக் கருத்தே புராணங்களில் விஸ்தரிக்கப் பட்டிருக்கிறது. அதுதான் ஹிந்து மதம்.

இந்த உலகத்தில் வாழும்போதே முக்திபெறலாமென்றும், செத்த பின்புதான் முக்தி பெறலாமென்று நினைப்பது தவறென்றும் ஹிந்து மதம்

போதிக்கிறது. இது ஹிந்துமதத்தின் பெருஞ்சிறப்பு. ராஜாங்க விஷயங்களில் தெய்வபக்தி ப்ரயோஜனப் படாதென்று நினைக்கக் கூடாது. ஸாதாரன மனிதன் தன்னுடைய அற்ப மனித பலத்தைக் கொண்டு, அஹங்காரத்துக்கும், விருப்பு வெறுப்பு முதலிய வெஞ்சினப் பாம்புகளுக்கும் இரையாகி ராஜரீக விவகாரங்களை நடத்துவான். பக்தனுக்கோ கடமையில்லை. "எல்லாக் கடமைகளையுந் துறந்து என்னைச் சரணடை பார்த்தா. இதுதான் என் இறுதி வாக்கு. அடே, அர்ஜுனா இது மிகவும் ரஹஸ்யம்; என் இறுதி வார்த்தை:- எல்லாக் கடமைகளையும் விடு, என்னையே சரணடை - நான் உன்னை எல்லாப் பாவங்களினின்றும் நீக்குவேன்" என்று கடவுள் பகவத் கீதையின் இறுதியில் அர்ஜுனனிடம் சொல்லுகிறார். அதுதான் ஹிந்து மதம் இன்று; அதுதான் பூமண்டலத்தின் மதம் இன்று. ராஜரீகத் துறையிலும் வேறெந்தத் துறையிலும் பக்தன் வேலை செய்யும்போது அந்தக் காரியம் அவனால் செய்யப்படுவதன்று. அவன் கருவியளவேயாக ஈசனால் நேரே செய்யப்படுவது. இந்திய ராஜ்ய தந்திரம் வெல்லுமோ? ஐரோப்பிய ராஜ்ய தந்த்ரம் ஜயிக்குமோ? பஞ்ச தந்த்ரம் மேலா? "மாக்கிய வல்லி" மேலா? எந்த ராஜ்ய தந்திரம் சிறக்கும்? பக்தனுடைய ராஜ்ய தந்திரம் ஜயிக்குமோ? அல்லது நாஸ்திகரும் ஈஸ்வர சத்துருக்களும் கைக்கொண்டு நடத்தும் அஸுர கணத்தால் வ்யாபிக்கப்பட்ட சொற்றை, ரசமில்லாத ராஜ்ய தந்த்ரம் ஜயிக்குமோ? ஆதலால், ராஜரீகத் துறையில் உடனே பயன்பெற விரும்புவோர், அதி விரைவிலே, சீக்கிரம், உடனே, பலனெய்த வேண்டுவோர் தெய்வ பக்தியைக் கைக்கொள்ள வேண்டும்.

இந்த விஷயத்தை ஸபையோர் அடிக்கடி கைகொட்டி வியப்புக் கூறி மகிழும்படி, இரண்டு மணி நேரத்துக்கு மேலே, நெடுநேரம் பேசினார். பிறகு ஸ்ரீமான் தசரத ராமய்யர் ஸ்ரீமான் ஸத்யமூர்த்தி ஐயரை ஒத்துழையாமை ஸம்பந்தமாக ஏதோ குறை கூறினார். அதற்கு இவர் ஸமாதானம் சொன்னார். பிறகு ஸ்ரீ தியாகராஜ ஞானியார் "அறிவு" என்ற விஷயத்தைக் குறித்துப் பேசினார். மிகவும் ரஸமாகப் பேசி, "அறிவே கடவுள்" என்ற வேதப் பொருளை நாட்டினார். "சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே, தேஜோ மயாநந்தமே" என்ற தாயுமானவர் அடியை மேற்கோளாக நன்கெடுத்துக் காட்டினார். அப்பால் வேறு சிலர் பேசினார்கள். பிறகு ஸபா நாயகர் சுமார் அரை மணி நேரம் மிகவும் நுண்ணறிவுடனும், ராஜ்ய தந்த்ர பாண்டித்யத்துடனும் பேசினார். ஸாமான்ய ஜனங்களைப் போலவே மிராஸ்தார்களும் உடல், பொருள், ஆவி மூன்றையும் தேச விடுதலைக்காகச் செலவிட வேண்டுமென்றார். பிராமணர் - அல்லாதார் என்ற பேதத்தைக் கண்டித்தார். இதனுடன் சபை முடிந்தது. இதைப் பற்றிய மற்ற விவரங்கள் பின்பு தெரிவிக்கிறேன்.

'சுதேசமித்திரன்' 15 டிசம்பர் 1920

ஆங்கிலக் கவிதை

# TRUTH

Ever will I trust in thee, O Truth.
In the temple of my heart shalt thou ever shine.
Keep thou my vision, true star of our stormiest nights,
Mother of Liberty, maker of strength.
Bride of the four - faced Lord who made these worlds.
O thou, white River of Bliss,
Soul of Being and its only light.
Hold thou my tongue.
Ever will I trust in thee, O Truth;
Not all the fiends of the triple worlds shall prevent me.
In the temple of my heart shalt thou shine for ever.

**Agni and other Poems and Translations : 1937**

# THE FOX WITH THE GOLDEN TAIL
## (A Fable)

Once upon a time, there was an old she-fox whom her fellow-foxes of the Fox-land detested very much, for she was very plain-spoken and very proud. And so they cut off her tail as a sort of punishment.

She said: "Oh my dear brethren, won't you make me your ruler?" On hearing this, all the foxes laughed a big laugh and drove her away with jeers and scorn. She then purchased an artificial gilt tail and having fastened it to her back, emigrated to the ancient land of Asses and Apes .

The Asses asked her "Who are you?" She said "I am the great she-fox of the golden tail, the wisest among all the foxes of Fox-land. They asked me over there to be their ruler. But I did not care for that position. I have a contempt for the intelligence of foxes and I have become a great admirer of the wisdom of the Asses, especially the older ones. And I have decided that it is better to be an humble pupil among the Asses than a great teacher and ruler among my own kind. Oh venerable Asses, teach me your wisdom."

On hearing this, all the Asses, especially the old ones, brayed for joy. And they began to speak to one another in their homes and councils, "What thinkest thou, brother? While the ordinary foxes pretend that they are much wiser than we and behave haughtily and contemptuously towards us, the wisest fox of them all has discovered that we, we the Asses, are the noblest and most thoughtful among animals and she has come to be a pupil among us. Yet the Apes in our own land have been mimicking the ways of the foxes and foolishly despising our great and ancient asinine institutions and traditions. Oh, what will the Apes say now? Those wicked Apes! The arrival of the Fox with the golden tail will once for all stop their poisonous chatterings and they will here-after cease teasing and humiliating us by their so-called criticism of our time-honoured Ass-traditions."

And the Asses had rightly judged their fellow-countrymen, the Apes. For the latter also were greatly impressed by the strange act of the Fox of the golden tail. "Whatever a fox says must be right" so argued many of the Apes, "and if the wisest of them all comes and pays homage to the culture of the Asses, we have reason to pause and consider if we have been quite right in laughing at our compatriots in such an outrageous manner as we have been doing."

But a few advanced Apes thought to themselves, "Nonsense! How can we give up the convictions of a life-time and begin to respect these Asses on the assertion of a single old fox, while all other foxes still treat them open contempt? What the foxes do, we must do. And, if there is a split among the foxes themselves, we can't help it. We shall merely cling to the doctrines of the majority of the foxes. "Thus thinking, they kept themselves aloof from the new movement of Assiatic Revival.

But the Revival itself progressed wonderfully, thanks to the winning ways of the Fox of the golden tail who gradually dropped her old pride and intolerance but substituted instead the worst type of cunning and sedulous flattery.

The Apes bent their heads low before the triumphant march of Assiatic reaction, and the Asses put on pontifical airs. Naturally, all this moved the simple hearts of the Asses, especially the older ones, very deeply and the emotions of joy and gratitude rose to such a high pitch among the long-eared ones that they soon elected the old Fox as their leader and High-priestess and gave her the improved title of the Golden Fox.

The Golden Fox was much delighted at this favourable turn of affairs. "After all," she thought, "it is something to be a ruler even among Asses. Of course, old age is an intolerable nuisance and so is the enforced company of the long-eared species. But then I have got this consolation that I can make those d-d foxes see that I am not an ordinary person and that

I am as cunning as the cunningest of them all. While other foxes merely strive for economic advantages in this Ass-land, I have easily gained a spiritual domination and this includes your economics and everything else. And the Asses call me the Golden Fox, confound their dear, stupid heads!" Her position among the Asses subsequently induced the emigrant Foxes to show her some outwards respect and sometimes even take her advice on economic matters. All this success soon made the Golden Fox lose her head. Her rule over the Asses gradually became more and more harsh, arrogant and whimsical, so that she soon began to tire the patience of even the most patient of her asinine followers. Discontent began to spread, especially among those who were her personal attendants.

One morning a middle-aged Ass whispered to an old comrade, "What thinkest thou, brother? The Golden Tail of the Golden Fox, I say, is a false and artificial one. She does not always wear it. I have seen her removing it and depositing it into a box before going to bed, each night. What sayest thou to this?"

"Pooh!" said the old Ass who was famous in the Ass-land for his great mastery of Assiatic culture and erudition. "We, older people, knew it long ago. It is the usual custom of the foxes. All of them, even those that have ordinary tails instead of golden ones as our leader, put them off before sleeping. "And the old one laughed scornfully at the ignorance displayed by his younger comrade.

The middle-aged Ass did not know what to say in reply. So he went home without further parley although he still had his own doubts about the accuracy of his old comrade's observation.

As time went on, other Asses also began to get suspicious about the genuineness of the golden tail and everywhere in the learned and erudite Ass – circles there were murmurings about the intolerable rule and incredible pretensions of the Golden Fox.

The Golden Fox then thought that she must slightly change her tactics and so hit on a new device to rekindle the waning loyalty of her followers. She knew she could always depend on the allegiance of the Elders of the long-eared community. So she induced the chief of the Elders to prevail upon a typically asinine member of the community to make an unconditional present of the latter's two colts to herself, so that, she declared, she might convert the little ones into golden – tailed Asses by initiating them in all the subtileties of the culture of the great Fox – race and by certain other mystic processes.

"Oh." She said, "After I succeed in making their tails golden like my own, you will see that all the animals we hold them in the highest reverence and treat them as Divine beasts. It will add to the Glory of the entire Ass tribe. And great miracles will be wrought by them such as were never heard of before in the animals of Ass – land."

This sensational announcement and all the flattering hopes it held out to the vanity of the long – eared race pleased the latter beyond all measure. A bargain was soon struck and two little ones were entrusted to the care and guidance of the Golden Fox. The first thing she did with her new wards was to have their little tails secretly cut off and make them wear big hoops so as to hide this loss from the scrutiny of her not over – scrutinous followers. She also made the little ones to always confine themselves to a small room in her own house and there sit with their backs turned towards the wall whenever there was company. She then proclaimed to the Asses that the tails of her young wards were slowly changing, that they had already become partly golden and that when the process was perfected they would be exposed to the sight of the whole world.

In the meanwhile, She ordered the more devoted and faithful Asses to come and offer daily worship to the little ones who were already alleged to be well advanced on the path to the Super – Ass condition. Great was the sensation which spread in the Ass – land, on account of these miraculous proceedings.

The older Asses were eagerly expecting the great day when the little Golden Asses, that were to be, would attain the Adept stage and the miracle of it all would once for all elevate the Ass – race highest point of spiritual glory.

But the parent who had more access to the little ones than others soon found out the real secret and felt greatly aggrieved and humiliated at the fate of his colts who had fallen into the unbearable degradation of being tail – less Asses. He therefore protested to the Golden Fox and asked her to restore his little ones to himself. Trouble ensued and it was greatly feared by the High – priestess and other leaders of the Assiatic Revival that the whole fraud would be exposed and they would be covered with endless shame.

The Chief Elder, who had, by this time, passed the stage of the dupe and become a willing participant in the schemes of the Golden Fox, easily prevailed upon the parent to give up his fears, promising on behalf of the Golden Fox that the little ones would be sent to Fox – land and given a thorough training in the great Fox – Culture and no further outrage to the parental sentiments would be committed thenceforth.

This satisfied the parent and the Golden Asses that were to be were accordingly sent to Fox – land. In the meanwhile, the tongue of rumour somehow spread the entire story throughout the length and breadth of the ancient land of Asses and Apes. The Apes began to heap scorn and irony on the heads of the poor Asses. "So you would fain manufacture Golden Asses, would you?" chattered the Apes," And the Golden Fox is going to elevate your children to the Super – Ass indeed! Tails – Less, tail – less....."

Information reached the Parent from Fox – land that his little ones had their long ears also cut off under orders from the Golden Fox and many other worse degradations were also mentioned, unworthy not merely of the sacred Ass – race but of any animal however vile it might be. "Ah, the shame of it! How we have been duped! Asses and no tails! Asses and no long ears! Alas, my dear little ones! Why did I ever listen to the perfidious brayings of the Chief Elder? Why did I ever

trust the Golden Fox? Ah, my children, they will next cut off your dear silver noses. And you are so far away from me, removed by miles and miles of forests and seas."

Thus lamented the parent and finding that the Golden Fox was in no mood to return his little ones to his custody and that all his comrades were either unwilling or unable or both to render him any assistance in this matter, he went to a large – hearted and wise Bull - one of the stray remnants of a race which was very numerous in the land long long ago – and besought his counsel.

The parent was especially wrathful against a compatriot of the Golden Fox, who was her chief accomplice and executed on the little ones all the degradations required by her and many other unutterable infamies for which she apparently gave no sanction. He had once prayed to the Golden Fox to remove his little ones from the foul association of her accomplice.

But she paid no need to his prayers and turned him out, heaping contempt and abuse on his poor head, and calling him the stupidest Ass in the whole of Ass-land.

The Bull listened to all this and advised the parent to seek redress in courts of law. And the Bull promised him every assistance that such an unfortunate Ass deserved at the hands of a nobler animal.

And the parent went to a court of law accordingly and asked that the Golden Fox be compelled to restore the custody of his children either to himself or, in case the court should consider him to be too much of an Ass to be entrusted with the care even of his own little ones, to any other person whom the court might deem fit.

This bold step adopted by the Specimen-Ass encouraged many other members of the community to come out and openly denounce the ways and pretensions of the Golden Fox. The wave of asinine resentment and revenge was set in motion and, excepting the oldest ones like the Chief Elder, very few remained faithful to the Golden Fox.

One morning, the Golden Fox discovered to her amazement, that her personal attendant had committed a nocturnal burglary and run away with her golden tail. There were crowds of Asses standing outside her house waiting to see her walk out without any tail, golden or other.

The Golden Fox endured all this disgrace with much outward show of fortitude. The judge decided that the Golden Fox should restore the little ones to their parent, viz. the Specimen - Ass.

The Golden Fox then took a short trip to Fox-land. The Asses were expecting that when she returned she would bring the little ones with her. But no. She came alone and of course, she wore no gilt - tail this time. She had also dropped all pretensions to modesty and good manners . She defied openly the laws of men and of gods. The old spirit which cost her tail in her early days took possession of her soul once again.

She heaped words of very bitter contempt and very violent hatred on the Ass - race which she had once praised as the noblest, wisest and loveliest on earth.

She now began to humour the Apes, calling them the dearest creatures on earth and delivering a series of lectures on topics which were dear to the Apeheart, such as the following:

1. The superiority of tail - less animals over all tailed ones, always excepting the Foxes.
2. How, even among the Foxes, a tail-less one is superior to the rest.
3. The paramount importance to Apes and Asses of voyages to Fox-land.
4. The basest of animals –the Asses. ( A jeremiad against long ears, White noses etc. )
5. How to convert an Ass into an Ape.
6. How to convert an Ape into a Fox; etc; etc.

But the Apes were not in mood to be won over by old she-foxes. They well remembered their old wrongs, how in the earlier days the Golden Fox used to vilify and mock them and so on; so they drove her out with scorn and contempt. She then made a last desperate effort to win back the allegiance of the Asses. But there is a limit even to Asinine folly and credulity. They too brayed scorn at her. In the meanwhile the authorities of the law pressed her to bring the little ones to the Ass-land and deliver them to their parent. But she had so far disfigured the little ones that she could not dare to obey that order.

So she secretly fled away to the Republic of Bees and Ants, where warrants from Ass-land could not be executed and it is understood that she has started a new cult there whose chief doctrine seems to be that the land of Bees and Ants will become a paradise the day on which they elect an old and tail-less She-Fox as president of their Republic - a cult to which she has given the strange title of Foxo - Bees - Antism.

[அன்னிபெசண்டை மனங்கொண்டு எழுதப்பெற்ற
அங்கதக் கதையிலக்கியம்]

# லோகமானிய பாலகங்காதர திலகருக்கு எழுதிய கடிதம்

THE BALA BHARATA
A Monthly organ of
Indian National Regeneration
Annual Subscription Re.1-8-0 only

The "Bala Bharata" Office
Triplicane, Madras
Dated, 29th May 1908

To

Sriman B.G.Tilak
Poona.

Dear Guruji,

I have received a letter from Pandit Krishnavarma asking us to open a Hindi class in Madras, under the auspices of the Chennai Jana Sangham. We have already opened a small class. I hope it will be fairly well - attended in due course of time. I shall report its progress, later on.

We have decided to hold a National provincial conference in Madras, on the lines marked out in the Calcutta Congress. What about the next Congress? What has become of our Nationalist Committee? Our Secretary Mr. Chidambaram is just now you know where. Please ask Mr. Kelkar to correspond with our Sangham about the matter.

Yours sincerely,
C. Subramania Bharati

# VERNACULAR LITERATURE

The most sorrowful symptom of that horrible malady viz National self – contempt is the disregard shown to the nation's own languages and literature by the upper and middle classes of intellectual life. The traitor that is ashamed of his own nationality betrays that fact in the most mournful fashion, by his being ashamed of his mother tongue. Those of us in the present generation who are, thanks to providential grace, beginning to take real and genuine pride in our nation and its part should therefore make it a point to acquaint themselves as far as possible with the spirit and genius of their own inherited language and culture and put forth, wherever and in whatever manner they can, their best efforts for the revival, improvement, purification and cultivation of the mother – literature.

In this matter the activities of our Bengali compatriots deserve much praise and commendation. The Hindustanis and the Mahrattas also, are far from being indifferent to the development of the Swabhashas. The intellectuals and the litterateurs of the Andhra, led by the venerable Viresalingam, are striving ahead, too. We are not in a position to gauge the activities of the Canarese and some other important sections of the Indian community in this respect.

The Tamil people are however, in a very backward condition, and their so – called intellectual leaders seem to think that they can develop the sentiment of national unity through the agency of the English Language. Probably, they do not pause to think about the percentage of English knowing men and women among the Tamil population. They seem to imagine that by the permeation of an undigested foreign culture through the means of a foreign language is sufficient for the realisation of national possibilities. About 20 centuries [ago] Tamilian literature and thought were so highly developed as to contest the palm of excellence with the Sanskritists or any other people in the world.

A poet like Kamban and a teacher of humanity like Valluvar have found in the Tamil Language an efficient vehicle of their thoughts, dreams and heart-throbbings, but to–day, we have many a semi-educated youngman in the Tamil country who thinks that it is a hopeless task to try to cultivate his mother–tongue and would fain see Tamil altogether disappear from the land, English, French, German or Russian substituting its place. Simpletons there are or at any rate some years ago there were who believe at that English is destined to become the common tongue of the population that is now speaking Tamil, and that the Language of Kamban is by the very laws of nature, bound to die away in what they call the struggle for existence.

Some of the more daring–spirited prophets tell us, or were telling us, that the future Language of all India will be English! A fitting supplement to that noble political creed that India shall, to the end of time, remain a dependency of some one of the western powers.

Our educated Countrymen should lay to heart the historical fact that there cannot be any national advancement without the advancement of the national literature and culture and take prompt measures to speedily bring about a Literary Revival. The Madura Tamil Sangam is a right move in the matter. But even that is not doing all that it can, for want of adequate support and patronage from the public which is culpably indifferent to this great enterprise.

It gives us immeasurable relief, however, to see one solitary warrior, standing dauntlessly in the field and fighting the battle of his forefathers with a unique zeal and courage, and winning on his venerable head the grateful blessings of the Mother. Such a warrior is Sriman Swaminatha Iyer of the Madras Presidency College. May many others throng round his banner, ever increasing in number, ever growing in devotion, lest this great and vital portion of the National Dharma remain unfulfilled!

கால வரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள்-3

# THE POESY OF ARUNAGIRI

ARUNAGIRI, Tamil poet and saint, lived at Thiruvannamalai in the sixteenth century A.D. There is a tradition, hardly credible, that he was a natural son of the famous Pattinattu Pillai.

Most of his songs are written in inconceivably difficult meters and have only a secondary value from the purely literary point of view. But in what appear to be his later poems, such as the five jewel-songs of praise and several portions of his Hymns to the spear etc., his style is clear as spring water and forceful as the lightning.

The Chief deity of his hymns is Subrahmanya, the Vaidic Kumara, who came out of the fire Eye of the Eternal in order to destroy the demons and protect the Devas. All his poems are spiritual; most of them are hymns.

I shall here attempt to translate some of his lines into English.

## I

## So be my Songs

Like a child unto the barren womb,
Like a new-found mine of treasure.
Like a floor of diamonds
so be my songs.

Like the wilful embrace of love's soft arms,
Like a string of the purest gems,
Like a garden of fragrant blossoms,
Like the river that descends from Heaven,
Even so be my songs.

Like Lakshmi the daughter of ocean,
Like eyes unto poets,
Like a stream full to the brim, easy to drint of,
Like the taste of the nectar of Thy beauty,
So be my wondrous songs of love,
By Thy grace, O Lord

## II

## When wilt Thou Deign?

To chase out the Iron Age,
To smite and banish Disease,
To still the fire that devours my heart,
To change what is bitter in me into sweet,
To wipe all foulness from my life,
And to bathe me in the rain of thy bounty
When wilt thou deign, O Lord?

That I gather in my roving mind and hold it fast and I dispel its darkness by placing there the lamps of thy beauty.

And for to keep it ever burning
That I mass my vision
And I sing forever thine immortal traits,
When wilt Thou grant thine utter grace?

The nature of the supreme Being was realized by Arunagiri, thus:

At the top of the hill called Knowledge
is the honey of bliss

My Master the six-faced son of God,
He revealed to me the unique Being
Who begot the primal Nought.

He is nor ether nor wind, nor fire
Nor water, nor earth, nor I, nor it
Nor form, nor formless

He is the end which being reached
Thou losest all and art silent, for He transcends the word.

The means of winning divine grace is absolute self-surrender. When grace is won, man conquers death. So, Arunagiri sings:

Of the error of death, we are free!

Again,

O Death, if thou mayst venture to come
Within range of my arms
I'll smite thee and fell thee down
Nor thy club nor thy trident shall avail thee
For I serve the God of fire
Who has given me the sword of love.

Desting can be conquered by grace, says Arunagiri,

Our lord who rides on the peacock
His spear slew the demon and dried up the sea.
And his feet touched my head and erased from
thence the script of the destiny

The goal to be reached is Liberation.
Once I was a miser without knowledge.
But He took me into His service that bath no term
And so I escaped from my prison.
The fetters of bondage I've broken
I am free! I am free!

கால வரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள், தொகுதி-9



இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற பெருங்கவிஞர் பாரதி. தமிழ்க்கவிதை வரலாற்றில் உருவத்திலும் உள்ளடக்கத்திலுமாக இரட்டைப் புரட்சிகளை நிகழ்த்தியவர் என உலகளாவிய தமிழறிஞர் கமில்சுவலபில் பாரதியை மதிப்பிட்டுள்ளார். கவிதைகளில் மட்டுமல்லாமல் கட்டுரை, சிறுகதை, நாடகம், மொழிபெயர்ப்பு, புதினம் முதலிய களங்களிலும் தனித்தன்மை கொண்ட படைப்புப் பங்களிப்பால் பாரதி மகத்தான சாதனைகளைப் புரிந்திருக்கின்றார். பன்முகப் படைப்பாளுமை கொண்ட பாரதி தமிழோடு ஆங்கிலத்திலும் இக்களங்களில் கைவண்ணம் காட்டியிருக்கின்றார்.

பாரதியின் பன்முகப் படைப்பாளுமையை இலக்கிய உலகம் ஒருசேரக் கண்டு மகிழ அருந்துணையாகும் குறுங்களஞ்சியம் இந்நூல்.

ISBN 978-81-929626-6-5






விழிகள்
பதிப்பகம்

₹ 60